சுற்றாய சோதி மகேந்தி ரஞ்சூழ மனத்திருள் வாங்கிச் சூழாதநெஞ்சிற் குற்றா யென்னுங் குணக்குன்றே யென் னுங் குலாத்தில்லை அம்பலக் கூத்தனையே. கக

வேறாக உள்ளத் துவகை விளைத் தவனிச் சிவலோக வேதவென்றி மாறாத மூவா யிரவரையும் எனையும் மகிழ்ந் தாள வல்லா யென்னு மாறார் சிகர மகேந்தி ரத்துன் னடி யார் பிழைபொறுப் பாய்மாதோர் கூறா யென்னுங் குணக் குன்றே யென்னுங் குலாத்தில்லை அம்பலக் கூத்தனையே. கஉ

திருச்சிற்றம்பலம்

(க) வரி 3. சுற்றிலும் சோதி மயமாகிய மகேந்திர மலை ய வலம் வந்து அதனால் மனத்திலுள்ள அஞ்ஞான இருளை ஓட்டிச் சி பெருமானைத் தியானம் செய்யாத நெஞ்சிலும் குன்றாத னே. குன்றாய் என்பது எதுகை நோக்கி குற்றாய் என்று ஆயிற்று.

(கஉ) வரி 1, 2. ம த்தின்கண் போனந்தத் த விளைவித்து அதன் தன்மை மாறும்படிச் செய்து பூவுலகத்தைச் சிவலோ மாகச் செய்து, வேத ளின் பயிற்சியால் வெற்றி மாறாத ருமான தில்லை மூ ாயிரவ ரயும். ஆறு ஆர் சி ரம் அருவிகள் நி றந், உச்சி.

# ௬. கோயில் - இணங்கிலாவீசன

## பண - கந்தாரம்

*திருச்சிற்றம்பலம்*

இணங்கிலா ஈசன்நேசத் திருந்தசித் தத்தி னேற்கு
மணங்கம ழ்சீர்த் தில்லை வாணன் மணவடி யார்கள் வண்மைக்
குணங்களைக் கூறா வீறிற் கோறைவாய்ப் பீறற் பிண்டப்
பிணங்களைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. க

எட்டுரு விரவி யென்னை யாண்டவன் ஈண்டு சோதி
விட்டிலங் கலங்கல் தில்லை வேந்தனைச் சேர்ந்தி லாத
துட்டரைத் தூர்த்த வார்த்தைத்தொழும்பரைப் பிழம்பு பேசும்
பிட்டரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. உ

---

(க) இணங்கு இலா ஒப்பு இல்லாத. ஈசன் நேசத்து இருந்த சித்தத்தினேற்கு - ஈசனை அன்பினால் பொருந்தியிருந்த மனத்தை யுடைய எனக்கு. மணம்.........குணங்களை - எக்காலத்தும் மகிழ்ச்சி யோடு கூடிய சிறப்பையுடைய தில்லைப்பதியின்கண் வீற்றிருக்கும் நடராஜப் பெருமானுடைய மங்கலமான அடியார்களுடைய ஈகைக் குணங்களை. வீறு இல் மேன்மை இல்லாத. கோறைவாய் - பொந்து போன்றவாய். பீறற்பிண்டப் பிணங்கள் - நவத்துவாரங் களையுடைய உடலைச் சுமந்து கொண்டிருக்கும் (நடைப்) பிணங் களை. என்னுடைய கண்கள் அவர்களைக் காணமாட்டா. என் னுடைய வாய் பேய் போல பயனற்று அலையும் அவர்களோடு பேசாது. இதனால் சிவனடியாரல்லாத மற்றவர்களைக் காணலும் அவர்களோடு பேசலும் கூடாது என்பது பெறப்பட்டது. 'ஈசனு க்கன்பில்லார்...பேசுவதென் அறிவில்லாப் பிணங்களை நாம் இணங் கில் பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ' எனனும் சிவஞான சித்தியார் செய்யுளோடு ஒப்பிடுக.

(உ) எட்டு உரு விரவி எட்டு உருவங்களோடு கலந்து. அவையாவன : நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன் ஆன்மா. ஈண்டு சோதி - திரண்ட சோதிவடிவினன். விட்டு இலங்கு அலங்கல் தில்லை வேந்தனை - ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற மாலையைத் தரித்த தில்லையம்பதிக்கு அரசனாகிய நடராஜப் பெரு மானை. தொழும்பர் அடிமகள். பிழம்பு - கொடுமை. பிட்டர் பிரஷ்டர் திருவருள் நெறிக்குப் புறம்பானவர்.

அருள்திரள் செம்பொற் சோதி அம்பலத் தாடுகின்ற
இருள்திரள் கண்டத் தெம்மான் இன்பருக் கன்பு செய்யா
வரட்டரை யரட்டுப் பேசு மழுக்கரைக் கழுக்க ளாய
பிரட்டரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. ௩

துணுக்கென அயனும் மாலுந் தொடர்வருஞ் சுடராயிப்பால்
அணுக்கருக் கணிய செம்பொ னம்பலத் தாடிக் கல்லாச்
சிணுக்கரைச் செத்தற் கொத்தைச் சிதம்பரைச் சீத்தையூத்தைப்
பிணுக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. ௪

திசைக்குமிக் குலவு சீர்த்தித் தில்லைக்கூத் துகந்து தீய
நசிக்கவெண் ணீற தாடும் நமர்களை நணுகா நாய்கள்
அசிக்க வாரியங்க ளோதும் ஆதரைப் பேத வாதப்
பிசுக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. ௫

ஆடர வாட ஆடும் அம்பலத் தமிர்தே யென்னுஞ்
சேடர்சே வடிகள் சூடத் திருவிலா உருவி னாரைச்
சாடரைச் சாட்கை மோடச் சழக்கரைப் பிழுக்கப் பிட்கப்
பேடரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. ௬

---

(௩) அருள் திரள் - அருள் திரண்டு வடிவெடுத்தாலொத்த. எம்மான் இன்பருக்கு - எம் தலைவனிடத்து, அன்பு செலுத்தி அதனால் இன்பம் அடையும் அடியவர்களுக்கு. "அன்பினால் இன்பமார்வார்" பெரிய புராணம். (பெருமையால்.) அரட்டர் - குறும்பு செய்பவர். அரட்டுப்பேசும் - கூச்சலிட்டுப் (பயனற்ற வார்த்தைகளைப்) பேசுகின்ற. அழுக்கரை - அசுத்தமானவரை; அல்லது பொறாமையுடையவரை. பிரட்டர் - பிரஷ்டர்.

(௪) துணுக்கென - திடுக்கிட்டு அஞ்சும்படி. அணுக்கருக்கு அணிய - அணுகினவர்களுக்குச் சமீபித்து வந்து அருள் புரியும் அம்பலத்தாடிக்கு அல்லா நடராஜப் பெருமானுக்கு அன்பர் அல்லாத. வரி 3. இழிவைக் குறிக்கும் வசை மொழிகள்.

(௫) கூத்து உகந்து...நமர்களை - நடனம் செய்யும் இறைவனை விரும்பி, தீமைகள் (பாவங்கள்) அழியும்படி திருநீற்றைத் தரிக்கும் நம்மவர்களை (சிவனடியார்களை). அசிக்க ஆரியங்கள் ஓதும் ஆதரை - (எதிரிகள்) பரிசிக்க வடமொழி நூல்களை ஓதும்படியான அறிவில்லாதவர்களை. பேதவாதப் பிசுக்கரை - பேதங்களைப் பற்றி வாதம் (தர்க்கம்) செய்யும் பொய்யர்களை.

(௬) சேடர் - அடியார். திருஇலா - பாக்கியமில்லாத. வரி 3. வசை மொழிகள். பேடர் - ஆண்மையற்றவர்.

உருக்கியென் னுள்ளத் துள்ளே ஊறலந் தேறல் மாறாத்
திருக்குறிப் பருளுந் தில்லைச் செல்வன்பாற் செல்லுஞ் செல்வி
னருக்கரை யள்ளல் வாய கள்ளரை அவியாப் பாவப்
பெருக்கரைக் காணு கண்வாய் பேசாதப் பேய்க ளோடே.

செக்கரொத் திரவி நூறு யிரத்திர ளொப்பாம் தில்லைச்
சொக்கரம் பலவ ரென்னுஞ் சுருதியைக் கருத மாட்ட ா
வெக்கரைக் குண்ட மிண்ட வெத்தரைப் புத்த ராதிப்
பொக்கரைக் ாணு கண்வாய் பேசாதப் பேய் ளோடே.

எச்சனைத் தலையைக் கொண்டு செண்டடித் திடபம் ஏறி
அச்சங்கொண் டமரர் ஓட நின்றஅம் பலவற் கல்லா
ச்சரைக் கல்லாப் பொல்லாக் கயவரைப் பசுநூல் கற்கும்
பிச்சரைக் காணு க வாய் பேசாதப் பேய் ளோடே.

விண்ணவர் மகுட கோடி மிடைந்தொளிர் மணி ள் சும்
அண்ணலம் பலவன் கொற்ற அரசனுக் காசை யில்லாத்
தெண்ணரைத் தெருளா உள்ளத் திருளரைத் திட்டைமுட்டைப்
பெ ணரைக் காணு கண்வாய் பேசாதப் பேய் ளோடே

(எ) ஊறல் அம்தேறல்-ஊறி வருகின்ற அழகிய தேன்போன்ற பேரின்ப உணர்ச்சி. செல்லும் செல்வின் - சென்ற டயும் மனப் போக்கு இல்லாத. அருக்கரை-குறைந்த அறிவுடையவரை. அள்ளல் ாய ள்ளரை - நரகத்தில் அழுந்துதற்குரிய திருடரை. அவியாப் பாவப் பெருக்கரை - ஒழியாத பாவங்களைப் பெருகச் செய்பவரை.

(அ) செ ர் ஒத்து - செவ்வானம்போன்று. சொக் ர் - அழகர் ; பரி த்தர். சுருதி - மந்திரம். எக் ர் - இறுமாப்புடையவர். குண்டர் - அடி மகள். மிண்ட எத்தரை மதம் பிடித்து வஞ்சிப்பவரை. பொ க்கர் - பொய்யர்.

(கூ) அம்பலவற்கு அல்லா - அம்பலத்தாடும் பெருமானு க்கு அன்பர் அல்லாத. கச்சரை - வெறுக்கத்தக்கவரை. ல்லாப் பொல்லாக் கயவரை - ஞான நூல்களைக் கல்லாத தீமை க்குணம் வாய்ந்த கீழ்மக்களை. பசுநூல் கற்கும் பிச்சர் - ஆன்ம போத நூல் ளைக் ற்கும் பித்தர்கள்.

(க0) தெண்ணர் - அறிவிலி ள். திட்டை முட்டை இழிவுத் தன்மை உணர்த்தும் சொற்கள். பெண் ரை - ஆண்மையற்றவ ர. "வாழ்த்தினின்று எத்தமாட்டா ஆண ாதவரைக் கண்டால் அம்ம நாமஞ்சுமாறே". திருவாச ம (ே ாணிலா.)

சிறப்புடை யடியார் தில்லைச் செம்பொனம் பலவற் காளாம்
உறைப்புடை யடியார் கீழ்க்கீ ழுறைப்பர்சே வடிநீ றடார்
இறப்பொடு பிறப்பி னுக்கே இனியராய் மீண்டும் மீண்டும்
பிறப்பதைக் காணு கண்வாய் பேசாதப் பேய்களோடே. கக

திருச்சிற்றம்பலம்

சேந்தனார் அருளிய

# திருவிசைப்பா

## க திருவீழிமிழலை

பண் பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

ஏக நாயகனை இமையவர்க் கரசை என்னுயிர்க் கமு
தினை யெதிரில் போகநா யகனைப் புயல்வணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த மேகநா யகனை மிகுதிரு
வீழி மிழலைவிண் இழிசெழுங் கோயில் யோகநா யகனை
யன்றிமற் றொன்றும் உண்டென உணர்கிலேன் யானே. க

(கக) வரி 1. 2. சிறப்பினையுடைய அடியவர்கள் வாழும் தில்லையம்பதியில் செம்பொன் அம்பலத்தில் ஆடுகின்ற நடராஜப் பெருமானுக்கு அடிமை பூண்டு ஒழுகும் மனவுறுதியுடைய அடியவருக்கு அடியவராய் ஒழுகும் மன உறுதியுடையவராய், சிவபெருமான் திருவடி என்று சொல்லப்படும் திருவருட்பேற்றிற்கு அறிகுறியாகிய திருநீற்றை உடல் முழுவதும் அணியாதவராய். "திருவடி நீறென்னைப்பூ" அப்ப° (ஆவாசிறு). இனியராய் - விருப்பமுடையவராய்.

( ) ஏ நாய னை - ஒருவனாய் (ஒப்பற்றவனாய்) யாவர்க்கும் தலைவனாயிருப்பவனை. எதிரில் போக நாயகனை - இணையில்லாத இன்பத்தை ஊட்டும் முதல்வனை. புயல்வ(ண்)ணற்கு அருளி மேவணனை திருமாலுக்கு அனுக்கிரகம் செய்து. பொன் னெடும் சிவிகையா ஊர்ந்த மே நாயகனை மேக வடிவங்கொண்ட விஷ்ணுவையே பொன்னாலாகிய நீண்ட சிவிகயாக் கொண்டு ஏறிச் செலுத்திய தலைவனாகிய சிவபெருமானை. திருவீழிமிழலைத் திருக்கோயில் விண்ணுலகத்தினின்றும் கீழே இறங்கி வந்ததெனப் புராணங்களில் கூறப்பட்டுள்ளது.

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக் கரையிலக் கருணைமா கடலை மற்றவ ரறியா மாணிக்க மலையை மதிப்பவர் மனமணி விளக்கைச் செற்றவர் புரங்கள் செற்றஎஞ் சிவனைத் திருவீழி மிழலைவீற் றிருந்த கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளங் குளிரவென் கண்குளிர்ந் தனவே.

மண்டலத் தொளியை விலக்கியான் நுகர்ந்த மருந்தை யென் மாறிலா மணியைப் பண்டலர் அயன்மாற் கரிதுமாய் அடியார்க் கெளியதோர் பவளமால் வரையை, விண்டலர் மலர்வாய் வேரிவார் பொழில்சூழ் திருவீழி மிழலையூ ராளுங் கொண்டல்அம் கண்டத் தெங்குரு மணியைக் குறுகவல் வினைகுறு காவே. ௩

தன்னடி நிழற்கீ ழென்னையுந் தகைத்த சசிகுலா மவுலியைத் தானே என்னிடைக் கமலம் மூன்றினுள் தோன்றி

(உ) கற்றவர் விழுங்கும் கற்பக கனியை - மெய்யுணர்வு தரக் கூடிய நூல்களைக் கற்றவர்கள் அநுபவிக்கும்படியான பேரின்ப உணர்வாயும் கற்பகத் தருவைப் போன்று அவர்கள் வேண்டியவற்றைத் தருபவனுமா யிருப்பவனை. மதிப்பவர் மனமணி விளக்கை - (அன்பால்) நினைப்பவருடைய மனத்தின்கண் மாணிக்கச் சுடர் போன்று பிரகாசிப்பவனை. செற்றவர் புரங்கள் செற்ற - துன்பம் செய்தவர்களுடைய முப்புரங்களை அழித்த.

(௩) மண்டலம் - பூமி. யான் விலக்கி நுகர்ந்த பிற பொருள்கள் எல்லாவற்றினின்றும் வேறு பிரித்து நான் அனுபவித்த. மருந்து - அமுதம். மாறு இல மணியை - மாறுபாடு இல்லாத மாணிக்கம் போன்றவனை. பண்டு அலர் அயன் மாலுக்கு அரிதுமாய் - முற்காலத்தில் தாமரைமேல் இருக்கும் பிரமனுக்கும் திருமாலுக்கும் காண்பதற்கு அரியவனாய். விண்டு அலர் மலர்வாய் வேரிவார் - இதழ் விரிந்து மலர்ந்த பூக்களினின்று தேன் ஒழுகிக் கொண்டிருக்கும், அல்லது வாசனை வீசும். கொண்டல் அம் - மேகம் போன்று கறுத்து அழகிய. குரு மணி - ஆசாரிய மாணிக்கம்; மிகச் சிறந்த ஆசாரியன். குறுக - நெருங்கினால்.

(௪) தகைத்த - தடுத்து ஆட்கொண்ட. சசி குலாம் மவுலி - சந்திரன் விளங்குகின்ற திருமுடியையுடையவன். மலம் மூன்று - அணவம் விந்தி ஆணவம் ஆகிய மூன்று மலங்கள்.

யெழுஞ்செழுஞ் சுடரினை அருள்சேர் மின்னெடுங்கடலுள்
வெள்ளத்தை வீழி மிழலையுள் விளங்குவெண் பளிங்கின்
பொன்னடிக் கடிமை புக்கினிப் போக விடுவனோ பூண்டு
கொண்டேனே. ௪

இத்தெய்வ நெறிநன் றென்றிருள் மாயப் பிறப்பறா
இந்திர சாலப் பொய்த்தெய்வ நெறிநான் புகாவகை புரிந்த
புராணசிந் தாமணி வைத்த மெய்த்தெய்வ நெறிநான் மறை
யவர் வீழி மிழலையின் இழிசெழுங் கோயில், அத்தெய்வ
நெறியிற் சிவமலா தவமும் அறிவரோ அறிவுடை யோரே

அக்கனா அனைய செல்வமே சிந்தித் தைவரோ டழுந்
தியான் அவமே புக்கிடா வண்ணங் காத்தெனை ஆண்ட
புனிதனை வனிதைபா கனைவெண் திக்கெலாங் குலவும்
புகழ்த்திரு வீழி மிழலையான் திருவடி நிழற்கீழ்ப் புக்குநிற்

---

(௪) அருள்சேர் மின் நெடுங் கடலுள் வெள்ளத்தை - ஒளி பொருந்திய அருள் வெள்ளமாயிருப்பவனை. போக விடுவனோ பூண்டு கொண்டேனே - திருவடிகளை என்னை விட்டு நீங்கும்படி விடமாட்டேன், அவைகளை என் சிரமீது பூண்டுகொண்டேன்.

(௫) இத் தெய்வ நெறி நன்று என்று முழுமுதற் கடவுளை அடைவதற்கு இந்த வழி நல்வழி என்று கருதி. இருள் மாயப்பிறப்பு அறா - அறியாமையும் வஞ்சகமும் கூடிய பிறவியை ஒழிக்கும் தகுதியில்லாத. இந்திரசாலப் பொய்த் தெய்வநெறி...புரிந்த - இந்திர ஜாலம் போன்று அழியும் தன்மை வாய்ந்த சிறு தெய்வ வழிபாட்டு நெறியில் நான் செல்லா வண்ணம் அருள்செய்த. புராண...... நான் மறையவர் பழைய உயர்ந்த தேவமணி போன்ற சிவபெருமான் காட்டிய உண்மைத் தெய்வத்தை அடையும்படியான வழியைப் பின் பற்றும் நான்கு வேதங்களில் வல்ல வேதியர் (வாழும்). சிவம் அ(ல்)லாது அவமும் - சிவபெருமான் திருவருள் அல்லாது பயனற்ற வேறுபொருளையும். ' அவமே பிறந்த அருவினையேன் உனக் கன்பருள்ளாம் சிவமே பெறும் திருவெய்திற்றிலேன்'' திருவாசகம் (தவமே ).

(௬) அக்கனா அனைய செல்வமே - அந்த கனவு போன்று மெய் போலத் தோன்றிப் பின் மறையும் செல்வத்தையே. ஐவரோடு அழுந்தி - ஐம்புல நுகர்ச்சியில் தோய்ந்து. அவமே புக்கிடா வண்ணம் - பயனின்றிப் (பிறவியில்) புகாதபடி.

பவர்தம் பொன்னடிக் கமலப் பொடியணிந் தடிமைபூ
டேனே. ௬

கங்கை நீ ரரிசிற் கரையிரு மருங் குங் கமழ்பொழில்
தழுவிய கழனித் தி ங்கள்டே ர் தீண்ட நீண்டமா ளிகை சூழ்
மாடநீ டுயர்திரு வீழித் த் குசீர்ச் செல்வத் தெய்வத்தான்
தோன்றி நம்பியைத் தன்பெருஞ் சோதி மங்கை யோர்
பா த் தென்னரு மருந்தை வருந் திநான் மறப்பனோ
இனியே. எ

ஆயிர மலம் ஞ யிரு யிரம்முக் ண்முக கரசர ணத்
தோன் பாயிரு க பணிநிலாக் ரந்த படர்சடை
மின்னுபொன் முடியோன் வேயிருந் தோளி உ மம
வாான் விரும்பிய மிழலைசூழ் பொழிலைப் போயிரு தேயும்
போற்றுவார் கழல் ள் போற்றுவார் புர தரா தி ளே. அ

எண்ணில்ப டே ாடி சேவடி முடி ள் எண்ணில்பல்
கோடிதிண் தோள் ள் எ ணில்பல் டே ாடி திருவுரு நாமம்
ஏர்கொள்முக் கண்முக மியல்பும் எ ணில்பல் டே ாடி
யெல்லைக்கப் பாலாய் நின்றைஞ்ஞூற் றந்தண ரேத்தும்
எண்ணில்பல் டே ாடி கு த்தர்ஏர் வீழி யிவர்நம்மை
ஆளுடை யாரே.

---

(௬) பொன் அடிக் கமலப் பொடி தாமரைபோன்ற அழகிய திருவடித் துகள்.

(எ) மழ் பொழில் தழுவிய கழனி - ம ங் மழும் சோலைகளை அடுத்துள்ள வயல் ள். தான்தோன்றி நம்பி - தானு த் தோன்றிய பெரு மயிற் சிற தவன். வருந்தி நான் மறப்பனோ - நான் மறந்து வருந்து னோ?

(அ) ரி 1. முக் ண் ள் ஆயிரம் சூரியர் ள் சேர்ந்தாற் போல ஒ ரியு ஏன. மு ம் கை திருவடி இ வ ஆயிரம் தாம ர மலர் போ று அழ ாய்த் தோன்றுவன. ரி 2. பாய்ந்து ஓடும் பெரிய கங் ா நதி யயு குளிர்ச்சி பொருந்திய சந்திரனையும் ஒ ரித்து வைத்துள்ள படர் த ச ட ஒளிவிட்டுப் பிரகாசி கி ற அழகிய திருமுடி யயு டய ன். வேய் இரும் தே ளி - பருத்த மூ கில் போன்ற தோ ளையு ட .

(கூ) ஏர்கொ ா - அழகு ாய்ந்த. தில்லை மூ ாயிர ர் போன்று, திருவீழி மிழலையில் ந்நூற்றந்த ர் இருந்த ா ன்ப.

தக்கன்வெ கதிரோன் சலந்தரன் பிரமன் சந்திரன் இந்திரன் எச்சன் மிக்கநெஞ் சரக்கன் புரம்கரி கருடன் மறலிவே ளிவர்மிகை செகுத்தோன் திக்கெலாம் நிறைந்த புகழ்த்திரு வீழி மிழலையான் திருவடி நிழற்கீழ்ப் புக்கிருந் தவர்தம் பொன்னடிக் கமலப் பொடியணிந் தடிமைபூ டேனே. க0

உளங்கொள மதுரக் கதிர்விரித் துயிர்மேல் அருள் சொரி தரும் மா பதியை வளங்கிளர் நதியும் மதியமுஞ் சூடி மழவிடை மேல்வரு வானை விள கொளி வீழி மிழலை வேந் தேயென் றுந்தனைச் சேந்தன்தா தையையான் களங் கொள அழைத்தாற் பி ழக்குமோ அடியேன் கைக்கொண்ட கன ற் பகமே. கக

பாடலங் காரப் பரிசில்கா சருளிப் பழுத்தசெந் தமிழ் மலர் சூடி நீடலங் காரத் தெம்பெரு மக்கள் நெஞ்சினுள்

(க0) எச்சன் - யாகத் தலைவன். மிக்க நெஞ்சு அரக்சன் - வன்மை மிக்க நெஞ்சுடைய இராவணன். புரம் - திரிபுரம். மறலி - யமன். வேள்-மன்மதன். இவர் மிகை செகுத்தோன்-இவர்களுடைய கர்வத்தை அழித்தவன்.

(கக) வரி 1. இன்பமயமான ஞானஒளியை மனதில் பொருந்து மாறு பரப்பி, உயிர்கள் மேல் அருள் மழையைப் பொழிகின்ற உமா தேவியார் நாயகனை. ஆம் தனை - கூடிய அளவில். களம் கொள அழைத்தால் - கண்டத்தினால் கூடியமட்டும் கூவி அழைத்தால். பிழைக்குமோ - (வாராமல்) தவறுமோ. கனக கற்பகமே - பொன் நிறம் வாய்ந்த கற்பகக் னி போன்ற சிவபெருமான்.

(கஉ) வரி 1 ?. பாடுகின்ற அலங்காரத்திற்கு வெகுமதியாக (திருஞா சம்பந்தருக்கும் திருநாவு ரசருக்கும்) பொற்காசுகளை அருள் செய்து, திருவருள் கனிந்த அல்லது மிகுந்த பயனைத் தரவல்ல செந்தமிழ்ப் பாமாலையை நீடித்து என்றும் அலங் ாரமா யிருக்கும்படிச் சூட்டிய பெரு ம மி க அவ்விரு அடியார்கள். பூமாலை சிறிது நேரத்தில் வாடிப் போகும்; பாமாலை என்றும் வாடாது.

நிறைந்துநின் றுன்னை வேடலங் காரக் கோலத்தின் அமுதைத் திருவீழி மிழலையூ ராளுங் கேடிலங் கீர்த்திக் கனககற் பகத்தைக் கெழுமுதற் கெவ்விடத் தேனே. கஉ

திருச்சிற்றம்பலம்

## உ. திருவாவடுதுறை*

பண் பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப் பூ தாளர் ஆயிரம் பூசுரர் மெய்யே திருப்பணி செய்சீர் மிகு ர விரிக்கரை மேய ஐயா திருவா வடுதுறை யமுதே யென்றுன்னை யழைத்தக்கால் மையார் தடங்க ர மடந்தைக் கொன் றருளா தொழிவது மாதிமையே. க

மாதி மணங் ம ழும்பொழில் மணிமாட மாளி க வீதிசூழ் சோதி மதிலணி சாந்தைமெய்ச் ருதி விதிவழி யோர்தொழும் ஆதி யமரர் புரா ளும் அணியா வடுதுறை ம்பிநின்ற நீதி யறிகிலள் பொன்னெடுந் தி டோள் புணர நினைக்குமே. உ

(கஉ) வேடு அலங்காரக் கோலத்தின் - அழகிய வே டு க் கோலம் பூண்ட. கேடு இல் அம் கீர்த்தி - கேடு இல்லாத அழகிய புகழ். கெழுமுதற்கு எவ்விடத்தேனே கூடுதற்கு நான் எவ்விதத் தகுதி யுடையவன் ?

இப்பதிகம், சிவபெருமான் மீது காதல்கொண்ட ஒரு பெண் ணின் தாய் கூறிய மொழிகளா ப் பாடப்பட்டுள்ளது. இப்பதிகம் அந்தாதித்தொ ட.

(க) சாந்தை - சாந்தையூர். சாந்தையூர் என்பது ஊர்ப்பெய ரும், திருவாவடுது றை கோவிலின் பெயரும்போல் தோன்றுகிறது. ம ந் தக்கு - மடந்தைப்பரு மு ள ன் ம ளுக்கு. ஒன்று - ஒரு வார்த்தை. மாதிமையே - அழகோ ?

(உ) மாதி - விருப்பத் தத் தரத்தக் , அழகிய அல்லது மாமரம். மெய்ச் சுருதி விதி வழியோர் - உண் மய ன வே த களின் ட்டளைப்படி நட கு அந்தணர். நினை குமே நினைப்பாள்.

நினைக்கு நிரந்தர னேயென்னும் நிலாக்கோலச் செஞ்சடைக் கங்கை நீர் நனைக்கும் நலங்கிளர் கொன்றைமேல் நயம்பேசும் நன்னுதல் நங்கைமீர் மனக்கின்ப வெள்ள மலைமகள் மணவாள நம்பிவண் சாந்தையூர், தனக்கின்ப னாவடு தண்டுறைத் தருணேந்து சேகர னென்னுமே. ரு

தருணேந்து சேகர னேயெனுந் தடம்பொன்னித் தென்கரைச் சாந்தையூர்ப் பொருள் சேர்ந்த சிந்தை யவர் தொழப்புகழ்செல்வம் மல்குபொற்கோயிலுள் அருள் சேர்ந் தமர்திரு வாவடு துறையாண் ஆண்தகை யம்மானே தெருள்சேர்ந்த சித்தம் வலியவா திலக நுதலி திறத்திலே.

திலக நுதலுமை நங்கைக்குந் திருவா வடுதுறை நம்பிக்குங் குலக அடியவர்க் கென்னையாட் கொடுத்தாண்டு கொண்ட குணக்கடல் அலதொன் றறிகின் றிலேனெனும் அணியும்வெண் ணீறஞ் செழுத்தலால், வலதொன்றிலள் இதற்கென் செய்கேன் வயலந்தண் சாந்தையர் வேந்தனே.

---

(ரு) நினைக்கும் - நினைப்பாள். நிரந்தரனே என்னும் - எக்காலத்து முள்ளவனே என்பாள்; அல்லது, நான் எக்காலத்தும் நினைக்கும் தன்மையுடையவனே என்பாள் என்னலுமாம். நலங்கிளர் - அழகு மிக்க. நயம் பேசும் - இன்பம் படப்பேசும். மனக்கு இன்ப வெள்ள - மனதிற்கு இன்பவெள்ளத்தைத் தருகின்ற.

(சா) தருண இந்து சேகரன் - இளஞ் சந்திரனைத் தரித்த திருமுடியுடையவன். பொருள் சேர்ந்த-மெய்ப்பொருள் சேர்ந்த. அருள் சேர்ந்து அமர் - அருளை வழங்கிக்கொண்டு வீற்றிருக்கும். வரி 4. தெளிந்த அறிவுடன் கூடிய உன் மனம் பொட்டு இட்ட நெற்றியுடைய என் மகள் விஷயத்தில் மட்டும், இரங்காமல் வலிதாயிருக்கின்றது; அதற்குக் காரணம் யாது?

(எ) குல அடியவர்க்கு - கூட்டமாகிய அடியார்களுக்கும். ஆட்கொடுத்து அடிமையாக் கொடுத்து. அ(ல்)லது ஒன்று அறிகின்றிலேம் எ(ன்)னும் - அல்லாமல் வேறு ஒன்றையும் அறிகின்றேன் இல்லை என்பாள். அணியும் வெண்ணீறு எழுத்து அஞ்சு அ(ல்)லால் வ(ல்)லது ஒன்று இலள் - வெண்மையான திருநீற்றை அணிவது பஞ்சாட்சரத்தை ஓதுதலும் அல்லாமல் செய்யவல்ல காரியம் வேறொன்றும் இல்லாதவளாய் இருக்கின்றாள்.

வேந்தன் வளைத்தது மேருவில்அரவுநாண் வெங்கணைசெ ங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம் பொடியாட வேதப் புரவித்தேர்
சாந்தை முதலயன் சாரதி கதியருளென்னுமித் தையலை
யாந்தன் திருவா வடுதுறையான் செய்கை யாரறிகிற்பாரே.

இற்போ மெனத்தக்கன் வேள்விபுக் கெழுந்தோடிக்
கெட்ட வத்தேவர்கள் சொற்போலு மெய்ப்பயன் பாவிகா
ளென்சொல்லிச் சொல்லுமித் தூமொழி ற்போல் மனம்
கனிவித்தவெ கருணையாவந்திடா யெ ன்றால் பெற்போ
பெருந்திரு வாவடு துறையாளி பேசா தொழிவதே. எ

ஒழிவொன்றி லாஉண்மை வண்ணமும் உலப்பிலள்
ஊறின்ப வெள்ளமும் ஒழிவொன்றி லாப்பொன்னித்

(சு) போந்த மதில் அணி முப்புரம் பொடியாட வேதப்புரவித் தேர் அயன் சாரதி அரவுநாண் செங்கண்மால் வெங்கணை வேந்தன் வளைத்தது மேருவில் - உ ந ட. சஞ்சரித்துக்கொண்டிருந்த மதிலோடு கூடிய அழகிய முப்புரங்கள் நீறாகி எரிய, வேதங்களாகிய குதிரைகளைக் கட்டிய தேரையும், பிரமனாகிய சாரதியையும், ஆதிசேஷனாகிய வில்லின் கயிற்றையும், சிவந்த கண்களையுடைய திருமாலாகிய அம்பையும் உடன்கொண்டு, அரசனாகிய சிவபெருமான் மேருமலையை வில்லாக வளைத்தனர். சாந்தை முதல் கதி அருள் - சாந்தையூர் முதல்வனே . ஆதரவு அளிப்பாய். யார் அறிகிற்பார் யார் அறியவல்லார் ? தையலை திருவாவடுதுறையான் (செய்த)- செய்கை யார் அறிகிற்பார் என்று கூட்டுக.

(எ) " பாவிகாள் . இற்போம்......மெய்ப்பயன் என் (என்று) இத்தூமொழி சொல்லிச் சொல்லும் உ ட. ' பாவி ளே . உங்கள் சொல்லானது, நா ள் வல்லவர் ள் என்று எ ணி, த ன் வேள்விக்குச் சென்று, வீரபத்திரர் வந்தபோது, அவ்விடத்தினின்று எழுந்து ஓடி அழிந்த தேவர்களுடைய வீரமொழிகளைப் போன்றுள்ளது ' மெய்ப்பயன் என்ன கண்டீர் ?" எ று பலகாலும் பரிசுத்தமான மொழியைப் பேசும் இப்பெண் சொல்லுவாள்.

(அ) ஒழிவு ஒன்று இலா உண்மை வண்ணமும் நக்கமற நிறைந்த உண்மைத் தன் மயும். உலப்பு இலன் று இ பவெள்ளமும் - அழிவில்லாதபடி ஊறிக்கொண்டிருக்கும் பேரின்பவெள்ளமும். ஒழிவு ஒன்று இலா ற்றுத.

தீர்த்தமும் முனிகோடி கோடியா மூர்த்தியும் அழிவொன்றி
லாச்செல்வச் சாந்தையூ ரணியா வடுதுறை யாடினாள் இழி
வொன்றி லாவகை யெய்தினின் றிறுமாக்கும் என்னிள
மானனே. அ

மானேர் கலைவளை யுங்கவர்ந் துளங்கொள்ளை கொள்ளவழக் குண்டே
தேனே அமுதேயென் சித்தமே சிவலோகநாயகச் செல்வமே
யானேய லம்புபுனற் பொன்னி அணியாவடுதுறை அன்பர் தங்
கோனேநின் மெய்யடி யார்மனக் கருத்தை முடித்திடுங் குன்றமே.

குன்றேந்தி கோகனதத் தயன் அறியாநெறி யென்னைக் கூட்டினை
யென்றேங்கி யேங்கி அழைக்கின்றாளிளவல்லி யெல்லைக டந்தனள்
அன்றேய லம்புபுனற் பொன்னி யணியாவடுதுறையாடினாள்
நன்றே யிவள்நம் பரமல்லள் நவலோக நாயகன் பாலளே.

---

(அ) முனிகோடி கோடியாம் மூர்த்தியும் - எண்ணில்லாத முனிவரையும், எண்ணில்லாத இறைவன் திருவுருவங்களையும். ஆடினாள் மூழ்கினாள். ஆவடுதுறை ஆடினாள் (ஆகிய) என் இளமான் அனே, வண்ணமும் வெள்ளமும், தீர்த்தமும், மூர்த்தியும் எய்தி நின்று இறுமாக்கும் என்று முடிக்க. இளமான் அனே - இளமானை ஒத்தவளாகிய என் மகள்.

(௯) மான் ஏர் கலைவளையும் - மான்போன்றவளின் அழகிய மேகலையையும் கைவளைகளையும். வழக்கு உண்டே-நியாயம் ஆகுமா? ஆனே அலம்பு பசுக்கள் ஒலியுடன் மூழ்குகின்ற. அல்லது ஆனே - அவ்விடத்திலே.

(௧௦) குன்று ஏந்தி கோகனதத்து அயன் - கோவர்த்தனம் என்னும் மலையைக் குடையாகப் பிடித்த திருமாலும், தாமரை மலர்மேல் இருக்கும் பிரமனும். அன்றே - அல்லவா? இளவல்லி எல்லை கடந்தனள் - இளங்கொடி போல்வாள் வரம்பைக் கடந்துவிட்டாள். அறியாநெறி யென்னைக் கூட்டினாய் (இவர்களால்) அறியமுடியாத திருவருள் நெறியில் என்னைச் சேர்ப்பித்தாய். அலம்பு சப்திக்கின்ற. நம்பரம் அல்லள் - நம்முடைய செயலுக்கு ஒத்தவள் அல்லள். நவலோகம் - புதுமை வாய்ந்த உலகம். பாலள் - சார்ந்தவள். நன்றே இது நன்றாயிருக்கின்றதா?

ப லும அமுதமும் தேனுமாய் ஆனந்தம தந்து ே பாலிப்பான
போலுமெ னுருயிர்ப் போகமாம் புரகால காமபு ராந்த ன்
சேலுங் கயலுந் திளைக்குநீர்த் திருவா வடுதுறை வேந்தனோ
' ாலுமதற் கெழுதலுமாம் அறிந்தோம் அரிவைபொய்யாததே.

திருச்சிற்றம்பலம்

## ௩. திருவிடைக்கழி*

பண - ட ஞ்சமம

திருச்சிற்றம்பலம்

மாலுலா மனந்தந் தென்கையிற் சங் ம் வவ்வினான் மலைமகள் மதலை, மேலுலாந் தேவர் குலமுழு தாளுங் குமர வேள் வள்ளிதன் மணாளன் சேலுலாங் கழனித் திரு விடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற வேலுலாந் தடக்கை வேந்தனென் சேந்தன் என்னுமென் மெல்லிய லிவளே.

---

(கக) தந்து உள்ளே பாலிப்பான் - மனத்தினுள் தந்து அருள் செய்வான். போலும் - அசை. என் ஆருயிர்ப் போகமாம் எனது அருமையான உயிரினிடத்து இன்பத்தை விளைவிப்ப னாகிய. கால காம புராந்தகன் யமனையும், மன்மதனையும், திரிபுரத்தையும் அழித்தவன். வரி 4. விளையாடுவதற்கே முற்படுவா ளாகின்றாள். இந்தப் பெ ண் இந்த வழி நின்று விலகாமை ய அறிந்தோம்.

*இப்பதிகம் முருகக்கடவுள் மேல் தோத்திரமாக அமைந் துள்ளது. இதுவும் முரு ன் மேல் காதல் கொண்ட ஒரு பெ ணின் தாய் கூறிய மொழிகளாக கூறப்பட்டுள்ளது.

(க) வரி 1. பர்வதராஜன் புத்திரியின் ம னை முருகப்பிரான் தன்னிடத்துக் காதலால் உண்டான மய கம் கொண்ட மனதை கொடுத்து என் கையிலுள்ள சங்கினாலாகிய வளையல்களைக் கவர்ந் தான். மேல்உலாம் - விண்ணுல த்தில் வாழ்கி ற. சேல் உலாம் கழனி சேல்மீன்கள் சஞ்சரிக்கும்படியான நீர் ளப்பமுள்ள நிலங் களையுடை ய. வேல் உலாம் தடக் - ே ல் ஏந்திய பெரிய ை. வேந்தன் என் சேந்தன் - சேந்தன் என் வேந்தன் (தலைவன்). சேந்தன் சிவந்த (அக்கினி) வடிவத்தை யு டயவ . மெல்லியள் மெல்லிய தன்மையுடையவள். என்னும் - என்று கூறுவாள்.

இவளை வாரிளமென் கொங்கைபீர் பொங்க எழில் கவர்ந்தானிளங் காளை கவளமா கரிமேல் வரிசூழ் குடைக் கீழ்க் கனக்குன் றெனவருங் கள்வன் திவளமா ளிகை சூழ் திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற குவளை மாமலர்க்கண் நங்கையானைக்கும் குழகன்நல் அழ கன் நங்கோனே. ௨

கோவினைப் பவளக் குழமணக் கோலக் குழாங்கள் சூழ் கோழிவெல் கொடியோன் காவல்நற் சேனையென் னக்காப் பவனென் பொன்னை மேலை கவர்வானே தேவினற் றலை வன் திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற தூவி நற் பீலி மாமயி லூருஞ் சுப்பிர மண்ணியன் தானே. ௩

தானமர் பொருது வானவர் சேனை மடியச்சூர் மார் பினைத் தடிந்தோன் மானமர் தடக்கை வள்ளல்தன் பிள்ளை மறைநிறை சட்டறம் வளரத், தேனமர் பொழில்சூழ் திரு

---

(௨) வார் இளமென் கொங்கை பீர் பொங்க - கச்சு அணிந்த இளமையும் மென்மையும் வாய்ந்த கொங்கைகளில் பசலை நிறம் மிக. கவள மா கரி - சோற்றுத்திரளை உண்ணும் பெரிய யானை. கவரிசூழ் - சுற்றிலும் வெண்சாமரை வீச. கள்வன் - காண்பார் மனதைக் கொள்ளை கொள்ளும் கள்வன். திவளம் - விளக்கம் (பொருந்திய). நங்கையானைக்கும் குழகன் - (முதற்பாட்டில் கூறிய வள்ளி அம்மையாருக்கு மல்லாமல்) நங்கையாகிய தெய்வயானை அம்மையாருக்கும் மணவாளர்.

(௩) பவளக் குழ - பவள நிறங் கொண்ட இளமை வாய்ந்த. காவல் நற்சேனை என்ன - காவலைச் செய்யும் நல்ல சேனையைப் போல. பொன்னை - பொன் போன்ற மகளை. தேவின் - தேவர் களுக்கு. தூவி - இறகு. பீலி - தோகை.

(௪) ரி 1. தேவர்கள் சேனை போரில் சூரனால் மடிய தான் சூர னுடன் போர்செய்து அவன் இறக்கும்படி மார்பினைப் பிளந்தவன். மான் அமர் - மானை ஏந்திய. மறைநிறை சட்டறம் - வேதங்களில் மிகுதியாகச் சொல்லப்பட்டுள்ள (ஷட்+அறம்) அறுவகைப் புண்ணி யச் செயல்கள். அவையாவன: ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்.

விடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற கோனமர்
கூத்தன் குலவிளங் களிறென் கொடிக்கிடர் பயப்பதுங்
குணமே. ௪

குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை படு
மிடர் குறிக்கொளா தழகோ மணமணி மறையோர் வான
வர் வையம் உய்யமற் றடியனேன் வாழத் திணமணி மாடத்
திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற மணி
பொருநீர்க் கங்கைதன் சிறுவன் ணபதி பின்னிளங்
கிளையே. ரு

கிளையிளஞ் சேயக் கிரிதனைக் கீண்ட ஆண்டகை
கே டில்வேற் செல்வன் வளையிளம் பிறைச்செஞ் சடையரன்
மதலை ார்நிற மால்திரு மரு ன் திளையிளம் பொழில்சூழ்
திருவிடைக் கழியில் திரு குரா நீழற்கீழ் நின்ற முளை
யிள களிறென் மொய்குழற் சிறுமி ருளுங்கொ ால் முருக
வேள் பரிந்தே

(௪) கோன் அமர் கூத்தன் குலவு இளங் ளிறு - தலைமை
வாய்ந்த கூத்தாடப ஞகிய சிவபெருமான் விரும்பிய பிரகாசி கின்ற
இளைய யானை போன்றவனுமாகிய முருகப்பிரான். குணமே நல்ல
த மை ஆகுமோ?

(ரு) குணம் அணிக் குருளை ற்குணம் வாய்ந்த அழகிய சிறுமி.
குறிக்கொளாது - வனியாமலிருப்பது. மணம் - கூட் ம். அணி -
பெருமை. தி அம் அணி - உறுதியா அழகிய அலங்காரமுள்ள.
ணம் மணி பொரு நீர் - மணித்திரள் ளைத் தள்ளிக் ொண்டு
போகும் நீரையு டய. பின் இளங்கிளை - தம்பியாகிய சிறுவன்.

(சு) கிளை இளம் சேய் - ஒளிபொருந்திய இள குமா . அக்
கிரிதனைக் ீ ட - அ கிரௌஞ்சமலை யப் பிள த. திளை - நெருங்
கிய. முளை இளம் களிறு - மி இளை யானை பே ன்றவன்.
மொய்குழல் - அடர்ந்த கூந்தல்.

பரிந்தசெஞ் சுடரோ பரிதியோ மின்னோ பவளத்தின் குழவியோ பசும்பொன் சொரிந்தசிந் தூரமோ தூமணித் திரளோ சுந்தரத் தரசிது வென்னத் தெரிந்தவை திகழ்வாழ் திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற வரிந்தவெஞ் சிலைக்கை மைந்தனை அஞ்சொல் மையல்கொண் டையுறும் வகையே. எ

கைமிகும் அசுரர் மாளவந் துழிஞை வானமும் விளைத்ததா ளாளன் புகைமிகும் அனலிற் புரம்பொடி படுத்த பொன்மலை வில்லிதன் புதல்வன் திகைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற தொகைமிகு நாமத் தவன்திரு வடிக்கென் துடியிடை மடல்தொடங் கினளே. அ

தொடங்கினள் மடலென் றணிமுடித் தொங்கல் புறஇத ழாகிலும் அருளான் இடங்கொளக் குறத்தி திறத்திலும் இறைவன் மறத்தொழில் வார்த்தையும் உடையன்; திடங்கொள்வை திகர்வாழ் திருவிடைக் கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற மடங்கலை மலரும் பன்னிரு நயனத் தறுமுகத் தமுதினை மருண்டே.

(எ) பரிந்த செஞ்சுடரோ - அன்புடன் கூடிய சிவந்த சோதி வடிவோ? 'அருளு டச்சுடரே' திரு ௱௪ ம. பரிதி - சூரியன். சிந்தூரமோ செவ்வொளியோ. வரிந்த - கட்டுள்ள அமைந்த. அம்சொல் - அழகிய சொல்லையுடைய பெண். தெரிந்த வைதிகர் வாழ்.........ஐயுறும்வகை , பரிந்தசெஞ்சுடரோ.........சுந்தரத்து அரசு இது என்ன(ப்படுவது ஆகும்) உ ந ட.

(அ) வகை மிகும் - பலவ கப்பட்ட. உழிஞை - உழிஞை மாலை யச்சூடி. உழிஞை அஷ்டவெற்றி மாலைகளுள் ஒன்று. தாளாளன் - முயற்சியுடையவன். தி கமிகும் - எல்லா திக்குகளிலும் பரவிய. என்துடியிடை - உடுக் க போன்ற இடை யையுடைய என் ம ள். ம ல் தொடங்கினள் - பனைமடல் ஏறத் தொடங்கினள்.

(கூ) அணிமுடி தொங்கல் - அழகிய முடியில் அணிந்த மாலை. இடம்கொ ளஅ குறத்தி - பக் த்தில் இ ங்கொ ண்டுள்ள வள்ளி அம்மையார். மறத்தொழில் ார்த் தயும் - கோபத் தத் தெரிவிக்கும் படியான செய்கையையும் சொல்லையும். திடம் - மன உறுதி. மடங்லை - வீரத்தால் சிங்கத் த ஒப்பவனை. மலரும்-விரிகி ற. மருண்டு (ாதலித்து) மய கி. மரு ே தொடங்கி மடல் என்றுமுடிக்க

மருண்டுறை கோயில் மல்குநன் குன்றப் பொழில்
வளர் மகிழ்திருப் பிடவூர் வெருண்டமான் விழியார் அருள்
செயா விடுமே விடலையே யெவர்க்கு(ம்)மெய் யன்பர்
தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியில் திருக்குரா
நீழற்கீழ் நின்ற, குருண்டபூங் குஞ்சிப் பிறைச்சடை முடி
முக் கண்ணுடைக் கோமளக் கொழுந்தே. ௧௦

கொழுந்திரள் வாயார் தாய்மொழியாகத் தூய்மொழி
யமரர்கோ மனைச் செழுந்திரட் சோதிச் செப்புதற்*
சேந்தன் வாய்ந்தசொல் லிவைசுவா மியையே செழுந்தடம்
பொழில்சூழ் திருவிடை கழியில் திருக்குரா நீழற்கீழ்
நின்ற எழுங்கதி ரொளியை யேத்துவார் கேட்பார் இடர்
கெடும் மாலுலா மனமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

(௧௦) மருண்டு உறைகோயில் - விரும்பி உறைகின்ற திருக்கோயில்கள். அருள் செயாவிடுமே அருள் செய்யாமல் போவானோ? விடலை - மணவாளன்; காளைப் பருவமுடையவன். விடலையே எவர்க்கும்-ஆன்மாக்களுக்கெல்லாம் நாயனுயிருப்பவன். தெருண்டவைதிகர் - தெளிந்த அறிவினையுடைய வேதத்தில் வல்லவர்கள். குருண்ட பூங்குஞ்சி - முன் கொண்டையுடைய அழகிய தலைமயிர். வரி 4. பிறையைத் தரித்த சடைமுடியையும் மூன்று கண்களையும் உடைய அழகிய வடிவங்கொண்ட சிவபெருமானுடைய குலக்கொழுந்து (குமாரன்) ஆன முருகப்பிரான்.

(௧௧) மால் உலாம் மனமே,தூய்மொழி அமரர் கோமனைச் செழுந்திரட் சோதிச் செப்புதற் சேந்தன் கொழுந்திரள் வாயார் தாய்மொழி யாய்ந்த சொல்லிவை சுவாமியையே செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியிற்றிருக்குரா......இடர்கெடும். உ ... மயக்க உணர்வினையுடைய மனமே. பரிசுத்தமான வாக்கையுடைய தேவர்பிரானும், செழுமையான திரண்ட சோதி வடிவினனுமான முருகப் பெருமானைப்பற்றிச் சொல்லுதற் கெழுந்த சேந்தனாகிய யான், வளமையோடு கூடித் திரண்ட வாயினையுடைய தலைவியரின் தாய்மார்கள் சொன்ன மொழிகளைப் போன்று இயற்றிய இப்பாடல்களினால், செழுமையான பெரிய பொழில்களாற் சூழப்பட்ட திருவிடைக்கழியில் குராமரத்தின் நீழலில் நின்ற,மேலெழுந்து விளங்கும் சூரியனைப் போன்ற ஒளி வடிவினனான முருகப்பெருமானைத் துதிப்போர், அல்லது துதித்தலைக் கேட்போருடைய துன்பம் நீங்கும்.

* செப்புறைச் சேந்தன் என்றும் பாடம்.

கருவூர்த்தேவர் அருளிய

# திருவிசைப்பா

## க கோயில்

பண - புறநீர்மை

*திருச்சிற்றம்பலம்*

கணம்விரி குடுமிச் செம்மணிக் கவைநாக் கறையனற் கட்செவிப் பகுவாய் பணம்விரி துத்திப் பொறிகொள் வெள்ளெயிற்றுப் பாம்பணி பரமர்தங் கோயில் மணம் விரி தருதே மாம்பொழில் மொழுப்பின் மழைதவழ் வளரிள கமு ந் திணர்நிரை யரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே. க

இவ்அரும் பிறவிப் பௌவநீர் நீந்தும் ஏழையேற் கென்னுடன் பிறந்த ஐவரும பகையே யார்துணை யென்றால் அஞ்சலென் றருள்செய்வான் கோயில், கைவரும் பழனங்

(க) ணம் விரி குடுமி - கூட்டமாக விரிந்துள்ள தலையும். ஐந்துதலை நாகத்தின் தலைகளைக் குறிக்கின்றது. செம்மணி - சிவந்த மாணிக்கம். வை நா - பிளந்த நாக்கு. கறையனல் - விஷமாகிய நெருப்பு; நெருப்பு போன்ற விஷம். கட்செவி கண்ணையே செவியாக உடையது. பகுவாய் - பெரிய வாய். பணம் விரி துத்திப் பொறி கொள்......பாம்பு அணிபரமர் - விரிந்த படத்தில் நெருங்கிய புள்ளிகள் வெ மையான பற்கள் ஆகிய இவற் றயுடைய பாம்பினை அணிந்த பரமர். வரி 3. வாசனை பரவிய இனிய மாமரச் சோலைகளின் செறிவில் மேகங்கள் தவழும்படி வளர்ந்துள்ள இளம்பாக்கு மரங்களின் குலை கள் வரிசையாக அரும்பியுள்ளன. மழை - மேகம். திணர் - குலை. மொழுப்பு செறிவு; அடர்த்தி.

(உ) வரி 1. இந்த டத்தற்கு அரிய பிறவியாகிய கடலில் நீந்துகின்ற அறிவில்லாத என்னுடன் பிறந்த ஐந்து பொறிகளும் பகையே. அஞ்சலென்று......திருச்சிற்றம்பலமே பயிரிட்டுத் திருந்திய வயல்களில் செழித்த செந்நெற் பயிர்களில் ளையா

குழைத்தசெஞ் சாலிக் கடைசியர் களைதரு நீலஞ் செய் வரம்(பு) அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச் சிற்றம் பலமே. ௨

தாயின்நே ரிரங்குந் தலைவவோ என்றுந் தமியனேன் துணைவவோ என்றும் நாயினேன் இருந்து புலம்பினு லிரங்கி நலம்புரி பரமர்தங் கோயில் வாயினே ரரும்பு மணி முருக் கலர வளரிளஞ் சோலைமாந் தளிர்செந், தீயின்நே ரரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே. ௩

துந்துபி குழல்யாழ் மொந்தைவா னியம்பத் தொடர்ந் திரு டியர்கணம் துதிப்ப நந்திகை முழவம் முகிலென முழங்க நடம்புரி பரமர்தங் கோயில், அந்தியின் மறை நான்(கு) ஆரணம் பொதிந்த அரும்பெறல் மறைப்பொருள் மறையோர் சிந்தையி லரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே. ௪

---

மூளைத்துள்ள நீலோற்பல மலர்களை பள்ளப்பெண்கள் பிடுங்கி நிலங்களின் வரப்புகளில் அரும்பும்படி எறியப்ப'டுள்ள பெரும் பற்றப்புலியூரில் செல்வம் வளர்கின்ற திருச்சிற்றம்பலமே கோயி லாகக் கொண்டு அஞ்சேல் என்று அருள் செய்பவே யாம்.

(௩) தலைவ ஓ ஓ தலைவனே. தமியனேன் துணைவவோ துணையின்றித் தனிப்பட்ட எனக்குத் துணைவனு யிருப்பவனே. ரி 3. மாதர்களுடைய சிவந்த உதடுகளுக்கு ஒப்பாகக் காணப்படு கின்ற அழகிய முருக்கம்பூ மலர. செந்தீயின் நேர்அரும்பும் - சிவந்த தீயைப் போன்று தோன்றும்.

(௪) துந்துபி குழல் யாழ் மொந்தை - இசை 'கருவி வகைகள். வான் இயம்ப - ஆ ாயத்தில் ஒலிக்க. நந்தி க முழவம் முகிலென முழங் - நந்திதேவர் கையிலுள்ள மத்தளம் மே த்தின் இடியைப் போல் சப்திக் . வரி 3. மறைநான்கு அந்தியின் ஆரணம் பொதிந்த.........அரு 'பும் ான்கு வேதங் ளின் முடி ாகிய உப நிடதங்களின் ஞானபா த்தில் நிரம்பியுள்ள அரிதில் பெற 'கூடிய வே ;தப்பொருள் வேதியர் சிந் தயில் வளரும்.

கண்பனி யரும்பக் கைகள்மொட் டித்தென் கண்
கணே ஒலமென் றேலிட் டென்பெலாம் உருகும் அன்பர்
தங் கூட்டத் தென்னையும் புணர்ப்பவன் கோயில் பண்பல
தெளிதேன் பாடிநின் றுடப் பனிமலர்ச் சோலைசூழ்
மொழுப்பிற் செண்பகம் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே. ரு

நெஞ்சிடர் அகல அகம்புகுந் தொடுங்கும் நிலைமையோ
டிருள்கிழித் தெழுந்த செஞ்சுடர் சுடர்வ போன்றொளி
துளும்பும் விரிசடை அடிகள்தங் கோயில் அஞ்சுடர்ப்
புரிசை ஆழிசூழ் வட்டத் தகம்படி மணிநிரை பரந்த செஞ்
சுட ரரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்
றம்பலமே. சு

பூத்திர ளுருவஞ் செங்கதிர் விரியாப் புந்தியில் வந்த
மால் விடையோன் தூத்திரள் பளிங்கில் தோன்றிய தோற்
றம் தோன்றநின் றவன்வளர் கோயில் நாத்திரண் மறை
யோர்ந் தோமகுண் டத்து நறுநெயான் மறையவர் வளர்த்த
தீத்திரள் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர்
திருச்சிற்றம் பலமே. எ

---

(ரு) வரி 1. ண்களில் ஆனந்தக் கண்ணீர் பனித்துளிகள் போல் தோன்றக் கைகளைத் தாமரை மொட்டு போல கூப்பி அஞ்சலி செய்து வணங்கி "என்னுடைய ஆதாரமே . அடைக்கலம்' என்று ஓலமிட்டு. ப பல தெளி தேன் பாடி பல பண்களைத் தேன் வண்டுகள் தேர்ந்து பாடி. மொழுப்பு அடர்ந்துள்ள இடம்.

(சு) செஞ்சுடர்......துளும்பும் - வெப்பத்தையுடைய சூரியன் பிரகாசிப்பது போல ஒளியைப் பரப்பும். அஞ்சுடர்.........பரந்த செஞ்சுடர் அரும்பும் - அழகிய ஒளிவீசும் மதிலை வட்டமாகச் சூழ்ந்துள்ள கடல்போன்ற அகழியினுள் படிந்து கிடக்கும் மாணிக்கக் கூட்டங்கள் சிவந்த ஒளியைப் பரப்பும்.

(எ) வரி 1. செந்தாமரை மலர்த்தொகுதியை ஒத்த திரு உருவம் சிவந்த ஒளியைப் பரப்ப அறிவினுள்ளே எழுந்த, திருமாலாகிய விடையையுடையவன். தூத்திரள் பளிங்கில் - வெண்ணிறம் கொண்ட பளிங்கு குவியல்போன்று. நாத் திரள் மறை ஓர்ந்து வேதியர்கள் நாக்கரினால் திரண்ட வேதங்களை உணர்ந்து ஓதி. நறு நெ(ய்)யால் மணம் பொருந்திய நெய்யினைக் கொண்டு.

சீர்த்ததிண் புவனம் முழுவதும் ஏனைத் திசை. லோ(டு) அண்டங்க ளனைத்தும், போர்த்ததம் பெருமை சிறுமைபுக் கொடுங்கும் புணர்ப்புடை அடிகள்தங் கோயில் ஆர்த்துவந் தமரித் தமரும் பிறரும் அலைகட விடுதிரைப் புனிதத் தீர்த்தநீ ரரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச் சிற்றம் பலமே. ௮

பின்னுசெஞ் சடையும் பிறைதவழ் மொழுப்பும் பெரி யதங் கருணையுங் காட்டி அன்னைதேன் கலந்தின் னமு(து) உகந்தளித்தாங் கருள்புரி பரமர்தங் கோயில் புன்னைதேன் சொரியும் பொழிலங் குடைந்து பொறிவரி வண்டினம் பாடுந் தென்னதேன் அரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே. ௯

உம்பர்நா டிம்பர் விள ் கியாங் கெங்கும் ஒளிவளர் திரு மணிச் சுடர்கான்(று) எம்பிரான் நடஞ்செய் சூழலங் கெல் லாம் இருட்பிழம் பறவெறி கோயில் வம்புலாங் கோயில் கோபுரங் கூடம் வளர்நிலை மா: மாளிகைகள், செம்பொனு லரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே. ௧௦

---

(அ) சீர்த்த - சிறப்புடைய. போர்த்த - பரவிய. பெருமை பெருமையில். புணர்ப்பு - தந்திரம். அமரித்து - பொருந்தி. அம ரரும்.........தீர்த்தநீர் அரும்பு தேவர் ளும் பிறரும் மூழ்கும்படி யான டல் அலைகளைப்போன்று அலை ளையுடைய பரிசுத்தமான தீர்த்தநீர் பெருகியிருக்கும்.

(௯) பின்னு பின்னிக்கொண்டிருக்கும். மொழுப்பு அடர்ந்த ச டமுடி. பொறிவரி வண்டினம் - புள்ளி ளையும், ே ாடுகளையும் உ டயவ ் டு ் கூட்டங் ள். தென்னதேன் அரும்பும் அழகிய தேன் வண்டுகள் தோ ் றும்.

(௧௦) இம்பர் இவ்வுலகில். திருமணிச் சுடர்கான்று - அழகிய மாணிக்கங்களின் ஒளி யப் போன்ற ஒளி யக் ்கி. சூழல் - இடம். இருட்பிழம்பு அற எறி இரு ் கூட்டம் முழுதும் ஒழியச் செய்கின்ற. வம்பு உலாம் - ாசனை வீ கின்ற.

இருந்திரைத் தரளப் பரவைசூ ழகலத் தெண்ணிலங் கண்ணில்புன் மாக்கள் திருந்துயிர்ப் பருவத் தறிவுறு கருவூர்த் துறைவளர் தீந்தமிழ் மாலை பொருந்தருங் கருணைப் பரமர்தங் கோயிற் பொழிலகங் குளிர்ந்தவண் டறங்கச் செருந்தி நின் றரும்பும் பெரும்பற்றப் புலியூர்த் திருவளர் திருச்சிற்றம் பலமே. கக

திருச்சிற்றம்பலம்

## உ. திருக்களந்தையாதித்தேச்சரம்

பண - புறநீர்மை

திருச்சிற்றம்பலம்

கலைகள்தம் பொருளும் அறிவுமா யென்னைக் கற்பினிற் பெற்றெடுத் தெனக்கே முலைகள்தந் தருளுந் தாயினும் நல்ல முக்கண்ணன் உறைவிடம் போலும் மலைகுடைந் தனைய நெடுநிலை மாட மருங்கெலாம் மறையவர் முறையோத் தலைகடல் முழக்கும் அந்தண்நீர்க் களந்தை அணிதிக ழாதித்தேச்சரமே.

---

(க) வரி 1. 2. பெரிய அலைகளால் முத்துக்களைக் கரைகளிற் சேர்க்கும் கடல் சூழ்ந்த உலகத்து அழகிய (அறிவாகிய) கண் இல்லாத எண்ணில்லாத அற்பமாந்தர் உயிர் திருந்தும்படியான தக்க பருவத்தில் அறிவிலே சென்று பற்றும் தன்மை வாய்ந்த கருவூர்த் தேவர் இயற்றிய சைவத்துறையை வளரச் செய்யும் (அல்லது கருவூர் என்னும் இடத்தில் வளர்ந்த) இனிமை மிக்க தமிழ்ப் பாமாலை. பொருந்து அரும் கருணைப் பரமர் அருங்கருணை பொருந்திய மேலானவர்.

( ) கலை ள் தம் பொருளும் அறிவுமாய் - நூல்களால் உணர்த்தப்படும் பொருளும் அவற்றால் பெறப்படும் அறிவுமாகி. மு ற ஒத்து......ஆதித்தேச்சரமே - வேதங் ளை முறையாக ஓதுவதானது டலின் அலை ளைப் போல் சப்திக்கும்படியான அழகிய குளிர்ச்சி பொருந்திய நீர் வளப்பமுள்ள திரு களந்தை என்னும் தலத்திலுள்ள ஆதித்தேச்சரம் என்னும் திரு கோயி ாகும்.போலும் அ ச.

சந்தன களபம் துதைந்த ன்மேனித் , வளவெண்
பொடி முழுதாடுஞ் செந்தழ லுருவிற் பொலிந்து நோக்
குடைய திருநுத லவர்க்கிட ம்போலும் இந்தன விலங்கல்
எறிபுனந் தீப்பட் டெரிவதொத் தெழுநிலை மாடம் அந்தண
ரழலோம் பலைபுனற்களந்தை அணிதிக ழாதித்தேச் சரமே.

கரியரே இடம்தான் செய்யரே யொருபாற் கழுத்தி
லோர் தனிவடஞ் சேர்த்தி முரிவரே முனிவர் தம்மொடால்
நிழற்கீழ் முறைதெரிந் தோருட ம்பினராம் இருவரே முக்
கண் நாற்பெருந் தடந்தோள் இறைவரே மறைகளுந் தேட
அரியரே யாகில் அவரிடங் களந்தை அணிதிக ழாதித்தேச்
சரமே. ௩

பழையராந் தொண்டர்க் கெளியரே மிண்டர்க் கரி
யரே பாவியேன் செய்யும் பிழையெலாம் பொறுத்தென்
பிணிபொறுத் தருளாப் பிச்சரே நச்சரா மிளிருங் குழைய
ராய் வந்தென் குடிமுழு தாளுங் குழகரே பொழுகுநீர்க்
கங்கை அழகரே யாகில் அவரிடங் களந்தை அணிதிக
ழாதித்தேச் சரமே. ௪

---

(௨) களபம் - கலவைச்சாந்து. தவள வெண்பொடி - கர்ப்
பூரம் போன்ற வெண்மையான திருநீறு. நோக்கு க . இந்தன
விலங்கல் எறி புனம் தீப்பட்டு எரிவது ஒத்து......அழல் ஓம்பு
விறகு மலைபோன்ற வெட்டப்ப ட காடு தீப் பற்றி எரிகின்ற தோற்
றத்தைப் போன்று எழு அடுக்குள்ள ம ளிகைகளில் வேதியர்
ள் ஓமாக்கினியை வளர்க்கின்ற. இந்தனம் - விறகு. விலங்கல் -
மலை. புனம் - காடு.

(௩) இடம் தா ரியரே உமாதே யார் இருப்பதால் இடப்
ப த்தில் ருமைநிறம் பொருந்தியவரே. ஒரு பால் செய்யரே ஒரு
பக்கம் (வலப்பக் ம்) செந்நிறம் உடையவரே. வரி 2. முனிவர் தம்
மொடு (கல்) ஆல் நிழற்கீழ் முறைதெரிந்து (மு றமையினை அறியச்
செய்து, முரிவரே (தோற்றுபவரே.) ஆகில் என்ப தக் கரியரே
செய்யரே முதலிய ற்றோடு கூட்டு .

(௪) மிண்டர் - துஷ்டர். பிச்சர் பித்தர். ச்சு அரா மிளிரும்
கு ழயராய் நஞ்சையு டய பாம்பை ஒளிவீசும் கு ழய அணி
தவராய். குழகர் - இளையர்.

பவளமே மகுடம் பவளமே திருவாய் பவளமே திருவுடம் பதனில் தவளமே களபம் தவளமே புரிநூல் தவளமே முறுவல் ஆடரவந் துவளுமே கலையுந் துகிலுமே யொருபால் துடியிடை யிடமருங் கொருத்தி அவளுமே யாகில் அவரிடங் களந்தை அணிதிகழ் ஆதித்தேச் சரமே. ௫

நீலமே கண்டம் பவளமே திருவாய் நித்திலம் நிரைத்திலங் கினவே போலுமே முறுவல் நிறையஆ னந்தம் பொழியுமே திருமுக மொருவர் கோலமே யச்சோ அழகிதே யென்று குழைவரே கண்டவர் உண்ட தாலமே யாகில் அவரிடங் களந்தை அணிதிகழ் ஆதித்தேச் சரமே. ௬

திக்கடா நினைந்து நெஞ்சிடிந் துருகுந் திறத்தவர் புறத்திருந் தலச மக்கடா அனைய என்னையாள் விரும்பி மற்றொரு பிறவியிற் பிறந்து பொய்க்கடா வண்ணங் காத்தெனக் கருளே புரியவும் வல்லரே யெல்லே யக்கடா வாகி லவரிடங் களந்தை அணிதிகழ் ஆதித்தேச் சரமே. ௭

---

(௫) பவளமே மகுடம் - சடைமுடி பவளம் போன்ற செந்நிறமுடையது. தவளமே வெண்ணிறமுடையது. களபம் - கலவைச் சாந்தாகப் பூசப்பட்ட திருநீறு. புரிநூல் முறுக்கோடு கூடிய பூணூல். ஆடு அரவம் துவளுமே ஆடுகின்ற பாம்பு தொங்கிக் கொண்டிருக்குமே. கலையும்......அவளுமே ஆகில் - மேகலையும் சேலையும் உடுக்கை போன்ற இடையில் தரித்த ஒரு பெண் இடப் பக்கத்தில் இருப்பாளாகில்.

(௬) நித்திலம் - முத்து. நிரைத்து இலங்கினவே - வரிசையாய் அமைத்துப் பிரகாசிப்பன. முறுவல் - பற்கள். அச்சோ - அதிசயச்சொல். ஆகில் என்பதை நீலமே, பவளமே, போலுமே, பொழியுமே, குழைவரே, ஆலமே என்பனவற்றோடு கூட்டுக.

(௭) திக்கடா (திக்கு+அடு+ஆ) எனப்பிரித்து, அடு திக்கு ஆ என மாற்றி சாரத்தக்க ஆதரவு நீயே ஆவாய் என - என்று பொருள் உரைக்க. இடிந்து நெகிழ்ந்து. அலச - வருந்த. மைக்கடா - எருமைக்கடா. பொய்க்கு அடா வண்ணம் பொய்ந்நெறியிற் சேராதபடி. எல்லே அக்கடாவாகில் - இருள் அங்கே நெருங்காமல் இருக்குமாகில்.

மெய்யரே மெய்யர்க் கிடுதிரு வான விளக்கரே யெழுது கோல் வளையாண் மையரே வையம் பலிதிரிந் துறையும் மயானரே உளங்கலந் திருந்தும் பொய்யரே பொய்யர்க் கடுத்தவான் பளிங்கின் பொருள்வழி யிருள்கிழித் தெழுந்த, ஐயரே யாகி லவரிடங் களந்தை யணிதிக ழாதித்தேச் சரமே ௮

குமுதமே திருவாய் குவளையே களமுங் குழையதே இருசெவி யொருபால் விமலமே கலையு முடையரே சடை மேல் மிளிருமே பொறிவரி நாகம் கமலமே வதனம் கமலமே நயனம் கன மே திருவடி நிலைநீர் அமலமே யாகி லவரிடங் களந்தை அணிதிக ழாதித்தேச் சரமே.

---

(௮) மெய்யர்க்கு மெய்யரே - மெய்யடியவர்களுக்கு உண்மைப் பொருளாயிருப்பவரே. மெய்யர்க்கு இடுதிரு ான விளக்கரே உண்மையடியவர்க்கு வைப்பு நிதிபோன்ற சோதி டிவினரே. மெய்யர்க்கு என்பதை மெய்யரே என்பதோடும் விளக்கரே என்பதோடும் கூட்டுக. எழுதுகோல் வளையாள் மயரே எழுதிய சித்திரம் போன்ற அழகிய வளையல்கள் அணிந்த மாதேவியாரிடத்து மையலை (காதலை) உடையவரே. அல்லது உமாதேவியாரை ஒரு ப க்கத்தில் உடைமையால் ருநிறம் வாய்ந்தவரே. பொய்யர்க்குப் பொய்யரே - மெய்யுணர்வு இல்லாத ர் ளுக்கு வெளிப்படாது மறைந்திருப்பவரே. அடுத்த வான் பளிங்கின் பொருள்வழி-ப 'கத்தி லுள்ள மேலான பளிங்குக் ல் ஒளியைத் தன்வழிச் செலுத்துமாறு போல, இருள் கிழித்து எழுந்த ஐயரே - (அஞ்ஞான) இருளைப் போக்கி எழுந்தருளி வந்த ஆசாரியரே. ஐயன் - ஆசாரியன் ; குரு.

(௯) குமுதமே திருவாய் - அழகிய ாய் செவ்வல்லி மலர் நிறமுடையது. குவளையே களமும் கண்டம் நீலோற்பல நிறமு டயது. ஒரு பால் விமல மேகலையும் ஒரு ப 'கத்தில் அழகிய மே லா பரணமும். பொறிவரி நாகம் புள்ளிகளையும் ே காடு களையும் உ டய பாம்பு. கனகமே திரு டி நிலை, நீர் அமலமேயாகில் திருவடியாகிய உயிர்கள் சென்று அடையுமிடம் பொ 'னிறமு டயது ; அதன் தன்மை மலம் இல்லாததாய் இரு 'குமாதைல். இறைவன் அநாதியாகவே மலமில்லாதவன்.

நீரணங் கசும்பு கழனிசூழ் களந்தை நிறைபுகழ் தாதிக் கேதச் சரத்து, நாரணன் பரவும் திருவடி நிலைமேல் நலம்மலி கலைபயில் கருவூர் ஆரணம் மொழிந்த பவளவாய் சுரந்த அமுதமூ றியதமிழ் மாலை ஏரணங் கிருநான் கிரண்டிவை வல்லோர் இருள்கிழித் தெழுந்தசிந் தையரே. க0

திருச்சிற்றம்பலம்

## ரு திருக்கீழ்க் கோட டூர் மணியம்பலம்

பண் - பஞ்சமம

திருச்சிற்றம்பலம்

தளிரொளி மணிப்பூம் பதஞ்சிலம் பலம்பச் சடைவிரித்(து)அலையெறி கங்கைத் தெளிரொளி மணிநீர்த் திவலைமுத் தரும்பித் திருமுகம் மலர்ந்துசொட் டட்டக் கிளரொளி மணிவண் டறைபொழிற் பழனங் கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர் வளரொளி மணியம் பலத்துள்நின் றாடும் மைந்தனென் மனங்கலந் தானே. க

(க0) நீர்அணங்கு அ ம்பு - நீர் அழகாக இடையறாது பாய்கின்ற. நலம்மலி.........தமிழ்மாலை மிக்க நன் ம யத் தரத்தக்க நூல் ளைப் பயின்ற கருவூர்த்தேவருடைய வேதங் ளைச் சொல்லும் பவளம் போ ற வாயினிடத்துச் சுரந்த பேரின்பத்தைத் தரும் தமிழ்ப்பாடல். ஏர் அணங்கு அழகு பொருந்திய. இருநான்கு இரண்டு இ வை பத்துப் பாடல்களாகிய இவற்றை. இருள்கிழித்து-அஞ்ஞா த் தப் போக்கி.

இப்பதி ம் சிவபெருமானிடத்துக் காதல்கொண்ட தலைவியின் மொழி ளா அ மந்துள்ளது.

( ) வரி 1 2. ஒளிவிட்டுப் பிரகாசி க்கும் மாணிக்கம் போன்ற அழகிய பாதங் ளில் சிலம்பு ள் ஒலிக்க, விரிந்த சடையின்மேல் அலை மோதும் கா நதியின் ஒளிவிளங்கும் அழகிய நீர்த்திவலை முத்து ள்போல் அரும்பித் திருமுகத்தினின்றும் சொட்டுச் சொட்டா விழ. ரி 3. ஒளிவீசும் இரத்தினம்போன்ற வ டுகள் சோலைகளிலும் நிலங்களிலும் தங் ள் ரீ கார ஒலியினால் மிகுந்த ஆரவாரத் ச் செய்யும் கீழ் கோட்டூரில். கெழு - மிகுந்த.

துண்டவெண் பிறையும் படர்ச டை மொழுப்புஞ் சுழிய மும் சூலமும் நீல கண்ட மு குழையும் பவளவா யிதழுங் கண்ணுதல் திலகமுங் காட்டிக் கொ டையும் யலும் உகளுநீர்ப் பழனங் கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர் வண்டறை மணியம் பலத்துள்நின் றாடும் மைந்தனென் மனங்கலந் தானே. உ

திருநுதல் விழியும் பவளவாய் இதழுந் திலகமும்உ டை யவன் சடைமேற் புரிதரு மலரின் தாதுநின் றா ப் போய் வருந் தும்பி ா ளிங்கே கிரிதவழ் முகிலின் கீழ்த்தவழ் மாடங் கெழுவுகம் பலைசெய்கீழ்க் ோட்டூர் வருதிறல் மணியம் பலவனைக் ண்டென் மனத்தையுங் கொண்டுபோ துமினே. ௩

தெள்ளுநீ றவனீ றென்னுடல் விரும்புஞ் செவியவன் அறிவுநூல் ேட்கும் மேன்மையே அவன்பேர் விளம்பும் வாய் கண்கள் விமானமே நோக்கிவெவ் வுயிர்க்குங் கிள்ளை பூம் பொதும்பிற் கொஞ்சிமாம் பொழிற்கே கெழுவுகம் பலை செய்கீழ்க் கோட்டூர் வள்ளலே மணியம் பலத்துள்நின் றாடும் மைந்தனே யென்னுமென் மனனே. ச

(உ) சடைமொழுப்பு - சடைமுடி. சுழியம்-உச்சி ொண் ட. உ ளும் - குதிக்கின்ற. வ டு அ ற - ண்டு ஒலிக்கின்ற.

(௩) புரிதரு லர் விருப்பத்தைத் தரும் பூ ள். மலரின் தாது நின்று ஊத - பூக் ளின் ம ரந்தப் பொடி ள் மெல்லிதாக விழும்படி. கொண்டு போதுமினே - கொண்டுபோய் அவனிடம் சேர்ப்பியுங் கள்.

(ச) தெள்ளும் நீறவன் மனத்தைத் தெளியச் செய்கின்ற திருநீற்றைத் தரித்தவன். அறிவு நூல் - சிவஞானத் தப்பற்றித் தெரிவிக்கும் நூல். ெ வ்வுயிர்க்கும் - பெருமூச்சுவிடும். கிள்ளை பூம் பொதும்பிற் ெ ாஞ்சி - ிளி ள் அழகி ய மாச்செறிவு ளில் மழலைமொழி பேசி. மைந்தன் வலிமையுள்ளவன். மனன் மனம்.

தோழியாம் செய் தொழிலென் எம்பெருமான் துணைமலர்ச் சேவடி காண்பான் ஊழிதோ றூழி யுணர்ந்துளங் கசிந்து நெக்குநைந் துளங்கரைந் துருகுங் கேழலும் புள்ளு மாகிநின் றிருவர் கெழுவுகம் பலைசெய் கீழ்க்கோட்டூர் வாழிய மணியம் பலவனைக் காண்பான் மயங்கவும் மாலொழி யோமே. ரு

என்செய்கோம் தோழி தோழிநீ துணையாய் இரவுபோம் பகல்வரு மாகில் அஞ்சலோ வென்னான் ஆழியுந் திரையும் அலமரு மாறுகண் டயர்வன் கிஞ்சுக மணிவா யரிவையர் தெருவிற் கெழுவுகம் பலைசெய் கீழ்க் கோட்டூர் மஞ்சணி மணியம் பலவவோ வென்று மயங்குவன் மாலையம் பொழுதே. சு

தழைதவழ் மொழுப்புந் தவளநீற் றொளியுஞ் சங்கமுஞ் சகடையின் முழக்குங் குழைதவழ் செவியுங் குளிர்சடைத் தெண்டு குண்டையுங் குழாங்கொடு தோன்றுங் கிழைதவழ் கனகம் பொழியுநீர்ப் பழனங் கெழுவுகம் பலை

---

(ரு) தோழி - தோழியே. துணைமலர்ச் சேவடி - அழகிய இரண்டு பாதங்கள். வரி 2. அநேக ஊழிக்காலங்கள் நினைந்து மனம் இளகி நெகிழ்ந்து நைந்து உருகும் தன்மை வாய்ந்து. வரி 3. பன்றியாகவும் அன்னப் பறவையாகவும் திருமால் பிரமன் ஆகிய இருவரும் எம்பெருமான் துணைமலர்ச் சேவடிகளைக் காணும் பொருட்டு மிக்க ஆரவாரம் செய்கின்ற. வாழிய அசை. காண்பான் மயங்கவும் - காணும்பொருட்டு அறிவு கலங்கியும். மால் காதல்.

(சு) அஞ்சலோ - பயப்படாதே. ஆழி - கடல். திரை - அலை. அலமறுமாறு கண்டு கலங்கும்படிச் செய்வதைக் கண்டு. அயர்வன் தளர்கின்றேன். கிஞ்சு மணிவாய் முருக்கம் பூப்போன்ற செந்நிறம் பொருந்திய அழகிய வாய். மஞ்சு - அழகு.

(எ) தழை தவழ் மொழுப்பு - வில்வம் அணிந்துள்ள திருமுடி. தவளம் - வெண்மை. சகடை - ஒரு வாத்தியம். சடைத்தெண்டு சடைக்கற்றை. குண்டை - எருது. குழாம் கொடு தோன்றும்-கூட்டமாய்க் காணப்படும். கிழை தவழ் ஒளிவீசும்.

செய்கிழ்க் கோட்டூர் மழைதவழ் மணியம் பலத்துள்நின்
றாடும் மைந்தர்தம் வாழ்வுபோன் றனவே எ

தன்னக மழலைச் சிலம்பொடு சதங்கை தமருகம் திரு வடி திருநீறு இன்நகை மழலை கங்கை கோங்கிதழி இளம் பிறை குழைவளரிளமான், கின்னரம் முழவம் மழலையாழ் வீணை கெழுவுகம் பலைசெய்கிழ்க் கோட்டூர் மன்னவன் மணி யம் பலத்துள் நின்றாடும் மைந்தனென் மனத்துள்வைத் தனனே. அ

யாதுநீ நினைவ தெவரையா முடைய தெவர்களும் யாவையுந் தானாய்ப் பாதுகை மழலைச் சிலம்பொடு புகுந் தென் பனிமலர்க் கண்ணுள்நின் றகலான் கேதகை நிழலைக் குருகென மருவிக் கெண்டைகள் வெருவுகிழ்க் கோட்டூர், மாதவன் மணியம் பலத்துள்நின் றாடும் மைந்தனென் மனம் புகுந் தானே கூ

---

(எ) மழை - மேகம். மைந்தர்தம் வாழ்வு போன்றன - வலிமை யுள்ள சிவபெருமானுக்குச் செல்வம் போன்றுள்ளன. மைந்தர் மைந்து (வலிமை) உடையவர்.

(அ) மழலைச் சிலம்பு - மழலை மொழி போன்று ஒலிக்கும் சிலம்பு. தமருகம் - உடுக்கை. இன் நகை மழலை கங்கை - இனிய புன்சிரிப்பும் மழலை மொழியும் உடைய கங்கையும். கோங்கு ஒரு மரம்; அதன் மலர். இதழி - கொன்றை. உ நடை: கின்னரம் முழவம்......மைந்தன், தன்ன மழலை......வளர் இளமான் (ஆகிய இவற்றை) என் மனத்துள் வைத்தனன்.

(கூ) வரி 1. மனமே. நீ நினைவதற்கு (அவனைத் தவிர) வேறு என்ன இருக்கின்றது. எவரை நாம் துணையாக உடையோம். எல்லா உயிர்களிலும், மற்றப் பொருள்களிலும் நிறைந்துள் வன். பாதுகை மிதியடி. கேதகை - தாழை. வரி 3. தாழையின் நிழலைக் கெண்டை மீன்கள் அணுகி அதனைக் குருகென்று நினைத்துப் பயப்பட்டு ஓடும். குருகு - நாரை. மாதவன் - பெருமை பொருந்திய தவக்கோலம் கொண்டவன்.

அந்திபோ லுருவும் அந்தியிற் பிறைசே ரழகிய சடை
யும்வெண் ணீறுஞ் சிந்தையால் நினையிற் சிந்தையுங்காணேன்
செய்வதென் தெளிபுனல் அலங்கற் கெந்தியா வுகளுங்
கெண்டை புண் டரீகம் கிழிக்குந்தண் பணைசெய்கீழ்க்
கோட்டூர் வந்தநாண் மணியம் பலத்துள் நின்றாடும் மைந்
தனே யறியுமென் மனமே. க0

கித்திநின் றாடும் அரிவையர் தெருவிற் கெழுவுகம் பலை
செய்கீழ்க் கோட்டூர் மத்தனை மணியம் பலத்துள் நின்றா
டும் மைந்தனை ஆரணம் பிதற்றும் பித்தனேன் மொழிந்த
மணிநெடு மாலை பெரியவர்க் ககலிரு விசும்பில் முத்தியா
மென்றே யுலகரேத் துவரேல் முகமலர்ந் தெதிர்கொளுந்
திருவே. கக

திருச்சிற்றம்பலம்

(க0) வரி 1. மாலைக்காலத்துச் செவ்வானம் போன்ற திரு வுருவமும், பிறையையுடைய செவ்வானம் போன்ற அழகிய சடையும். சிந்தையால் நினையிற் சிந்தையும் காணேன் - மனத்தினால் நினைந்து பார்க்கும்போது நான் நினைக்கின்றேன் என்ற உணர்ச்சியும் இழந்து அவன் வயமாகின்றேன். தெளிபுனல் அலங்கல் கெந்தியா உகளும் - தெளிந்த நீரில் ஒளிவிட்டுக்கொண்டு தெளிந்து சென்று துள்ளிக் குதிக்கும். தண்பணைசெய் - குளிர்ச்சியான வயல்கள் சூழ்ந்த.

(க) கித்தி மகளிர் விளையாட்டு. கெழுவு கம்பலை செய் - நிறைந்த ஆரவாரம் செய்கின்ற. மத்தன் - ஊமத்த மலரை அணிந்தவன். மணிநெடு மாலை-அழகிய பெரிய பாமாலை. பெரியவர்க்கு...... திருவே - ஓதுகின்ற பெருமையுடையோர்க்கு அன்ற பெரிய தேவலோகத்தில் முத்தி சித்திக்குமென்று கருதி உலகத்தவர் (இப்பாமாலையினால்) துதிப்பாராயின், இலக்குமி முகமலர்ச்சியுடன் எதிர்கொண்டு தேவலோகத்தில் சேர்ப்பிப்பாள்.

## ௪. திருமுகத்தலை

**பண் - பஞ்சமம்**

*திருச்சிற்றம்பலம்*

புவனநா யகனே அகவுயிர்க் கமுதே பூரணா ஆரணம் பொழியும் பவளவாய் மணியே பணிசெய்வார்க் கிரங்கும் பசுபதீ பன்னகா பரணா அவனிஞா யிறுபோன் றருள்புரிந் தடியேன் அகத்திலும் முகத்தலை மூதூர்த் தவளமா மணிப்பூங் கோயிலும் அமர்ந்தாய் தனியனேன் தனிமைநீங் குதற்கே. க

புழுங்குதீ வினையேன் வினைகெடப் புகுந்து புணர்பொரு ளுணர்வுநூல் வகையால் வழங்குதேன் பொழியும் பவளவாய் முக்கண் வளரொளி மணிநெடுங் குன்றே முழங்குதீம் புனல்பாய்ந் திளவரால் உகளும் முகத்தலைஅகத்தமர்ந் தடியேன் விழுங்குதீங் கனியாய் இனிய ஆனந்த வெள்ளமா யுள்ளமா யினையே. உ

---

(க) அக உயிர்க்கு அமுதே - உயிரினுக்குள் அமுதம் போன்று இன்பம் தருபவனே; அல்லது அகவு உயிர்க்கு அமுதே - (உன்னை அன்பினால்) அழைக்கும் உயிர்களுக்கு அமுதம் போன்று இன்பம் தருபவனே. ஆரணம் - வேதம். பன்னக ஆபரணா - பாம்புகளை ஆபரணமாகத் தரித்தவனே. தவளம் - வெண்ணிறம்.

(உ) புழுங்கு தீவினையேன் - தீவினையினால் வரும் துன்பமுடையேன். புகுந்து - என் மனத்தினுட் புகுந்து. புணர் பொருள் அடையவேண்டிய மெய்ப்பொருளை. உணர்வு நூல் - ஞான நூல். வழங்குதேன் பொழியும் பவளவாய் - மழை பொழிவதுபோல் பேரின்ப உணர்ச்சியை மிகுதியும் விளைவிக்கின்ற பவளம் போன்று சிவந்த வாயினையும். முகத்தலை அகத்து அமர்ந்து - திருமுகத்தலை என்னும் தலத்தினிடத்து வீற்றிருந்து. உள்ளம் ஆயினை என் மனம் முழுமையும் நிறைந்து விட்டனை.

கன்னெகா உள்ளக் கள்வனேன் நின்கட் கசிவிலேன் கண்ணில்நீர் சொரியேன், முன்னகா ஒழியேன் ஆயினுஞ் செழுநீர் முகத்தலை அகத்தமர்ந் துறையும், பன்னகா பரணா பவளவாய் மணியே பாவியேன் ஆவியுள் புகுந்த தென்னகா ரண(ம்)நீ யேழைநா யடியேற் கெளிமையோ பெருமையா வதுவே.

ங

கேடிலா மெய்ந்நூல் கெழுமியுஞ் செழுநீர்க் கிடையன் றுடையவென் னெஞ்சிற் பாடிலா மணியே மணியுமிழ்ந் தொளிரும் பரமனே பன்னகா பரணா, மேடெலாஞ் செந்நெற் பசுங்கதிர் விளைந்து மிகத்திகழ் முகத்தலை மூதூர், நீடினா யெனினும் உள்புகுந்(து) அடியேன் நெஞ்செலாம் நிறைந்துநின் றாயே.

ச

அக்கனா வனைய செல்வமே சிந்தித் தைவரோ டென்னொடும் விளைந்த, இக்கலாம் முழுதும் ஒழியவந் துள்புக் கென்னையா ளாண்ட நாயகனே, முக்கணா யகனே முழுதுல கிறைஞ்ச முகத்தலை யகத்தமர்ந்(து) அடியேன் பக்கல்ஆனந் தம் இடையறா வண்ணம் பண்ணினாய்பவளவாய்மொழிந்தே.

---

(ங) கல்நெகா உள்ளம் - கல்லைப்போன்று உருகாத மனம். முன்நகா ஒழியேன் - உன் முன்னே சிரித்தலை நீங்கேன்; விளையாட்டுப் புத்தியுடையேன். அமர்ந்து உறையும் - விரும்பிக் கோயில் கொண்டிருக்கும்.

(ச) கேடு இலா மெய்ந்நூல் - கேட்டை இல்லையாகச் செய்யும் மெய்யுணர்வைக் கொடுக்கும் நூல். கெழுமியும் - பழகியும். செழுநீர்க் கிடை அன்னார் உடைய என் நெஞ்சில் - நீரிடத்துக் கிடந்தும் நீர் ஊறாத தக்கையைப் போன்று (மெய்ந்நூற் கருத்துகள் ஒன்றும் பதியாத) என் மனதில் (அமர்ந்த). கிடை - தக்கை. பாடு - அழிவு. மேடு - மேட்டு நிலங்கள். நீடினாய் - நெடுங்காலமாக உறைகின்றாய்.

(ரு) வரி 1. கனவைப் போன்று நிலையற்ற அப்பொருட் செல்வத்தையே ஈட்டுவதிலும் காத்தலிலும் மனதைச் செலுத்திய ஐம்புலன்களுக்கும் எனக்கும் நேரிட்ட இக்கலகம் முழுவதும் ஒழியும்படி. நீ என்னை ஆட்கொள்ளுமுன் ஐம்புலன்களுக்கும் எனக்கும் போராட்டம் நிகழ்ந்துகொண்டே இருந்தது. ஆட்கொண்ட பிறகு அப்போராட்டம் முற்றிலும் ஒழிந்தது. இடையறா வண்ணம் - நடுவில் விட்டு நீங்காதபடி. பவளவாய் மொழிந்து - பவளம்போன்று சிவந்த வாயினால் உபதேசித்தருளி.

புனல்பட உருகி மண்டழல் வெதும்பிப் பூம்புனல்
பொதிந்துயி ரளிக்கும் வினைபடு நிறைபோல் நி றைந்த
வேதகத் தென் மனம்நெக மகிழ்ந்தபே ரொளியே முனைபடு
மதில்மூன் றெரித்த நாயகனே முகத்தலை யகத்தமர்ந் தடி
யேன், வினைபடும் உடல்நீ புகுந்துநின் றமையால் விழுமிய
விமானமா யினதே. ௬

விரியுநீர் ஆலக் கருமையும் சாந்தின் வெண்மையுஞ்
செந்நிறத் தொளியுங் கரியும் நீறாடுங் கனலுமொத் தொளி
ரு' கழுத்திலோர் தனிவடங் ட்டி முரியுமா றெல்லா முரிந்
தழகியையாய் முகத்தலை யகத்தமர்ந் தாயைப் பிரியுமா
றுளதே பேய்களேஞ் செய்த பிழைபொறுத் தாண்ட
பேரொளியே. ௭

என்னையுன் பாத பங்கயம் பணிவித் தென்பெலாம் உரு
கநீ யெளிவந் துன்னையென் பார்வைத் தெங்குமென் ஞான்
றும் ஒழிவற நிறைந்தவொண் சுடரே முனைனையென் பாசம்
முழுவதும் அகல முகத்தலை யகத்தமர்ந் தெனக்கே கன்ன
லும் பாலு' தேனும்ஆர் அமுதுங் கனியுமாய் இனியையா
யினையே. ௮

---

(௬) வரி 1. 2, (சுடுவதற்குமுன்) நீர்பட்ட மாத்திரத்தில் கரைந்து போகும் தன்மை யுடையதும், (மண்டு+அழல்) மிகுந்த தீயிடையிட்டு சுட்ட பொழுது அழகிய நீரைத் தன்னிடத்து வைத்துக்கொண்டு உயிரைக் காப்பாற்றும் தன்மை வாய்ந்ததுமான, வேலைப் பாடமைந்த நீர்ச்சால் போன்று, மாறுபாடு அடைந்த என் மனத்துள் நிறைந்து மனம் உருக, மகிழ்ந்து அருள் புரிந்த பேரொளி வடிவினனே. நிறை - நீர்ச்சால். முனைபடும் - பகைத்து வந்த. வினைபடும் உடல் வினையினால் எடுத்த உடம்பு.

(௭) விரியும்நீர் ஆலம் கடலினிடத்து எழுந்த ஆலகாலவிஷம். சாந்து - லவைச் சாந்துபோல அணிந்த வெண்ணீறு. வரி 2. கரியையும் நீறுபூத்த நெருப்பையும் ஒத்துப் பிரகாசிக்கும் கழுத்தில். வி ம் தங்கிய இடத்திற்குக் கரி உவமை. முரியுமாறெல்லாம் முரிந்து - தோன்றும் வகையெல்லாம் தோன்றி நின்று. பிரியும் ஆறு உளதே - பிரியும் வ உ 'டோ? இல்லை.

(௮) பங் யம் - தாமரை. கன்னல் சர்க்கரை' கருப்பஞ்சாறு.

அம்பரா அனலா அனிலமே புவிநீ அம்புவே இந்துவே இரவி உம்பரால் ஒன்றும் அறிவொணா அணுவாய் ஒழிவற நிறைந்தவொண் சுடரே மொய்ம்பராய் நலஞ்சொல் மூதறி வாளர் முத்தலை யகத்தமர்ந் தெனக்கே யெம்பிரா னாகி ஆண்டநீ மீண்டே எந்தையுந் தாயுமா யினையே. ௯

மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய் முகத்தலை யகத்தமர்ந் தினிய பாலுமாய் அமுதாம் பன்னகா பரணன் பனிமலர்த் திருவடி இணைமேல் ஆலையம் பாகின் அனையசொற் கருவூர் அமுதுறழ் தீந்தமிழ்மாலை சீலமாப் பாடும் அடியவரெல்லாஞ் சிவபதங் குறுகிநின் றாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## ௫ திரைலோக்கியசுந்தரம்*

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

நீரோங்கி வளர்கமலம் நீர்பொருந்தாத் தன்மையன்றே
யாரோங்கி முகமலர்ந்தா கருவினையேன் திறம்மறந்தின்

(௯) அம்பரா - ஆகாயமாயுள்ளவனே. அனிலம் - காற்று. அம்பு - நீர். அணு - உயிர். சிவபெருமானுடைய அஷ்டமூர்த்தங்கள். மொய்ம்பராய் - மன உறுதி உடையவராய். நலம்சொல் மூதறிவாளர் - நன்மையைச் செய்யும் சொற்களைப் போதிக்கின்ற பேரறிவுடையோர் (வாழ்கின்ற). எம்பிரான் - எமக்குத் தலைவன்.

(௧௦) ஆலை அம்பாகு - கரும்பினின்றும் உண்டான இனிய கற்கண்டு. உறழ் - ஒத்த. சீலமாப்பாடும் - அழகாகப் பாடுகின்ற

*இத்தலம் சோழ நாட்டில் ஆடுதுறை என்னும் இருப்புப் பாதை நிலயத்திற்கு அருகில் உள்ளது. அதற்கு திரைலோக்கி என்னும் பெயர் வழங்குகின்றது.

(௧) சீர்ஓங்கும் பொழில் கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. அருவினையேன் திறம் மறந்து இன்று ஊர் ஓங்கும் பழி பாராது

ஆரோங்கும் பழிபாரா துன்பாலே விழுந்தொழிந்தேன்
சீரோங்கும் பொழில்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே.

நையாத மனத்தினனை நைவிப்பான் இத்தெருவே
ஐயாநீ உலாப்போந்த அன்றுமுதல் இன்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலுஞ்
செய்யாயோ அருள்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே.

அம்பளிங்கு பகலோன்பா லடைப்பற்று யிவள்மனத்தின்
முன்பளிந்த காதலும்நின் முகந்தோன்ற விளங்கிற்றால்
வம்பளிந்த கனியேயென் மருந்தேநல் வளர்முக்கட்
செம்பளிங்கே பொழிற்கோடைத் திரைலோக்கியசுந்தரனே

---

ஆரோங்கி முழும் மலர்ந்தாங்கு உன்பாலே விழுந்து ஒழிந்தேன். நீர் ஓங்கி வளர்கமலம் நீர் பொருந்தாத் தன்மையன்றே - உ ந ட.
**பொழிப்புரை :** சிறப்புற்று ஓங்கும் பொழில்களால் சூழப்பட்ட கோடை என்னும் தலத்தில் திரைலோக்கிய சுந்தரம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கும் சிவபெருமானே. போக்குதற் கரிய தீவினையினேன் என்னுடைய மேன்மையை மறந்து, இன்று ஊரா ரால் பழிக்கப்படுதலையும் கவனியாமல், ஒளி மிகுந்து முழும் மலர்ந்து, உன்னிடத்தே சரணடைந்தேன். அப்படியிருந்தும் நீரில் செழித்து வளர்கின்ற தாமரையில் நீர் ஒட்டாமல் இருக்கும் தன்மை யைப்போல் நீ என்னுடன் ஒட்டாமல் இருக்கின்றாய். ஆர் - ஒளி. ஆங்கு அசை.

(உ) நையாத - உருகாத. உலாப்போந்த - பவனி வந்த முதல் இரண்டு பாடல்களும் தலைவி (உயிர்) தலைவனிடம் (கடவுளிடம்) தன் காதலைப்பற்றிக் கூறிய மொழிகள் போன்றவை

(ஈ) இந்த பாடல் முதல் 10-து பாடல் வரை தோழி தலைவ னிடம் கூறிய மொழிகளாக அமைந்துள்ளன. ரி 1, 2. அழகிய பளிங்கானது சூரியன் முன்னிலையில் அடைகின்ற ஒளியைப்போல இவள் மனத்தில் முன்பு இருந்த முதிர்ந்த காதலும் உன் முகத் தைக் கண்டவுடன் விளக்கமாய்த் தோன்றியது. வம்பு அளிந்த கனியே - ரசனையோடுங் கூடிய பழுத்த பழமே.

மைஞ்ஞின்ற குழலாள்தன் மனந்தரவும் வளைதாரா
திஞ்ஞின்ற கோவணவன் இவன்செய்த தியார்செய்தார்
மெய்ஞ்ஞின்ற தமர்க்கெல்லாம் மெய்ஞ்ஞிற்கும் பண்பினுறு
செய்ஞ்ஞன்றி யிலன்கோ டத் திரைலோக்கிய சுந்தரனே.

கோவாரா தொழிந்தாலும் நின்பாலே விழுந்தேழை
கோவாத மணிமுத்து குவளைமலர் சொரிந்தனவால்
ஆவாவென் றருள்புரியாய் அமரர்கணம் தொழுதேத்தும்
தேவாதென் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே

முழுவதும்நீ ஆயினும்இம் மொய்குழலாள் மெய்ம்முழுதும்
பழுதெனவே நினைந்தோராள் பயில்வதும்நின் ஒருநாமம்
அழுவதும்நின் திறம்நினைந்தே அதுவன்றே பெறும்பேறு
செழுமதில்சூழ் பொழிற்கோடைத் திரைலோக்கியசுந்தரனே.

தன்சோதி யெழுமேனித் தபனியப்பூஞ் சாய்க்காட்டாய்
உன்சோதி எழில்காண்பான் ஓலிடவும் உருக் காட்டாய்

(ச) மைஞ்ஞின்ற - ம+நின்ற; கருநிறமுடை ய. இஞ்ஞின்ற இ+நின்ற; இவ்விடத்தே நின்ற. மெய்ஞ்ஞின்ற மெய்ந்நெறியில் நின்ற. மெய்ஞ்ஞிற்கும் பண்பின் உறு - உண்மையா நடந்து கொள்ளும் தன்மையினால் உண்டாகின்ற. மனம் தரவும் வளைதாராமையால், 'செய்ந்நன்றி இலன்'' என்றார். செய்ஞ்ஞின்ற நீலம்... ...மைஞ்ஞின்ற ஒண்கண்.........அபப .

(ரு) ஏழை நின்பாலே விழுந்து-இப் பெண் உன்னிடத்து காதல் கொண்டு. வரி 2. கண்களாகிய நீலோற்பல மலர் கோக் ப் படாத அழகிய முத்துக்களை (கண்ணீரை)ச் சொரிந்தன.

(சு) முழுவதும்.........நினைந்தோராள் நீ எல்லாப் பொருள் களிலும் கலந்து நின்ற போதிலும் இம்மொய்த்த கூந்தலையு டைய பெண்ணிடத்து நீ ராரமையால் தன்னுடல் முழுதும் குற்றமுடையது என்று எண்ணி மனம் தெரியாமல் இருக்கின்றாள். பயில்வதும் நின் ஒருநாமம் சதா சொல்லி கொண்டிருப்பதும் உன் ஒப்பற்ற நாமம் தவிர வேறொன்றுமில்லை.

(எ) வரி 1. தன்னுடைய சோதியுடன் கூடிய திருமேனியின் பொன் போன்ற அழகிய சாயலை (நிறத்தை)க் காட்டமாட்டாய் ஓலிடவும் இவள் ஓலமிட்டு அழை வும்.

துஞ்சாகண் இவளுடைய துயர்தீரும் ஆறுரையாய்
செஞ்சாலி வயற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. ௭

அரும்பேதைக் கருள்புரியா தொழிந்தாய் நின் அவிர்சடைமேல்
நிரம்பாத பிறைதூவும் நெருப்பொடுநின் கையிலியாழ்
நரம்பாலு முயிரீர்ந்தாய் நளிர்புரிசைக் குளிர்வனம்பா
திரம்போது சொரிகோடைத் திரைலோக்கிய சுந்தரனே. அ

ஆறாத பேரன்பி னவருள்ளம் குடிகொண்டு
வேறாகப் பலர்சூழ வீற்றிருத்தி யதுகொண்டு
வீறாடி யிவளுன்னைப் பொதுநீப்பான் விரைந்தின்னந்
தேறாள்தென் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே.

சரிந்ததுகில் தளர்ந்தஇடை அவிழ்ந்தகுழல் இளந்தெரிவை
இருந்தபரி சொருநாள் கண்டிரங்கா யெம் பெருமானே
முரிந்தநடை மடந்தையர்தம் முழவொலியும் வழங்கொலியுந்
திருந்துவிழ வணிகோடைத் திரைலோக்கிய சுந்தரனே. ௧௦

எ. துஞ்சா கண் - இவள் கண் உறங்காது. செஞ்சாலி வயல் செந்நெல் விளையும் வயல்.

(அ) அவிர் சடை - பிரகாசிக்கும் சடை. வரி 2, 3. முற்றாத இளம்பிறை சிந்துகின்ற நெருப்பினாலும், உன் கையிலிருக்கின்ற யாழ் நரம்பின் இசையாலும் இவளுடைய உயிரைப் பிளந்தாய். பெருமை மிக்க மதில்களாற் சூழப்பட்ட குளிர்ந்த நந்தவனம் பாதிரி மலர்களைச் சொரிகின்ற.

(க) ஆறாத தணியாத. வீறாடி உன் பெருமையில் ஈடுபட்டு. பொது நீப்பான் - உன்னைப் பொதுத்தன்மையினின்று நீங்கித் தனக்கே உரியவனாகச் செய்யும்பொருட்டு. தேறாள் தேறுதலை யடையா திருக்கின்றாள்.

(கO) வரி 1. நழுவின ஆடையோடும் தளர்ந்த இடையோடும், அவிழ்ந்த கூந்தலோடும் இந்த இளம் பெண் இருந்த நிலைமையினை. முரிந்த நடை - துள்ளிப் போகின்ற நடை. முழங்கு ஒலியும் வழங்கு ஒலியும் திருந்து விழவு அணி பாடல்களினால் எழுகின்ற ஒலியும் ஆடலில் சிலம்பு முதலிய அணிகளினால் எழுகின்ற ஒலியும், திருத்தமாக முறையில் நிகழும் திருவிழாவினை அலங்கரிக்கின்ற.

ஆரணத்தேன் பருகிஅரும் தமிழ்மாலை கமழவரும்
காரணத்தின் நிலைபெற்ற கருவூரன் தமிழ்மாலை
பூரணத்தா லீரைந்தும் போற்றிசைப்பார் காந்தாரஞ்
சீரணைத்த பொழிற்கோடைத் தில்லைலோக்கிய சுந்தரனே.

திருச்சிற்றம்பலம்

## ௬ கங்கைகொண்டசே ளேச்சரம்

ப - பஞ்சமம

திருச்சிற்றம்பலம்

அன்னமாய் விசும்பு பறந்தயன் தேட அங்ஙனே
பெரியநீ சிறிய என்னையாள் விரும்பி யென்மனம் புகுந்த
எளிமையை யென்று(ம்)நான் மறக்கேன் முன்ன(ம்)
மாலறியா ஒருவனும் இருவா முக் ணு நாற்பெருந் தடக்
தோள் கன்னலே தேனே யமுதமே கங்கை கொண்டசோ
ளேச்சரத் தானே. க

---

(கக) சிறப்பு வாய்ந்த சோலைகள் சூழ்ந்த கோடைத் திரை
லோக்கிய சுந்தரனே . இந்த அரிய தமிழ் மாலை வேதங்களின் சார
மாகிய தேனைக் குடித்து, சிவமணம் கமழப்பெற்ற காரணத்தினால்
அழியாத தன்மை வாய்ந்தது. கருவூர்த்தேவரால் இயற்றப்பட்ட
தமிழ்ப்பாமாலையில் தொடுத்த பத்து பாடலையும் காந்தாரப் பண்ணி
னால் போற்றி இசையோடு ஓதுபவர் நிறைவை அடைவார்கள்.

(க) தேட அங்ஙனே பெரிய நீ தேடும்படி அவ்வளவு பெரிய
உருவத்தைக் கொண்ட நீ. இருவா இருவடிவமாய் (ஆணும்
பெண்ணுமாய்) இருப்பவனே . கன்னல் - கரும்பு.

உள்நெகிழ்ந் துடலம் நெக்குமுக் கண்ணா ஓலமென் றோலமிட் டொருநாள் மறவாது நின்னைநின் றலறேன் வழிமொழி மாலை மழலையஞ் சிலம்படி முடிமேற் பண்ணிநின் றுருகேன் பணிசெய்யேன் எனினும் பாவியேன் ஆவியுள் புகுந்ததென் கண்ணிநின் றகலா னென்கொலோ கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே. ௨

அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே அன்பொடு தன்னையஞ் செழுத்தின் சொற்பதத் துள்வைத் துள்ளமள் ளூறுந் தொண்டருக் கெண்திசைக் கனகம் பற்பதக்குவை யும் பைம்பொன்மா ளிகையும் பவளவா யவர்பணை முலையுங் கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே. ௩

ஐயபொட் டிட்ட அழகுவாள் நுதலும் அழகிய விழி யும்வெண் ணீறுஞ் சைவம்விட் டிட்ட சடைகளுஞ் சடை மேல் தரங்கமுஞ் சதங்கையுஞ் சிலம்பும் மொய்கொளெண் திக்குங் கண்டநின் தொண்டர் முகமலர்ந் திருகண்ணீர் அரும் பக் கைகள்மொட் டிக்கு மென்கொலோ கங்கை கொண் டசோ ளேச்சரத் தானே. ௪

(௨) உள் நெகிழ்ந்து மனம் உருகி. வழி மொழிமாலை - சிவ பெருமானை அடையும் வழியைப்பற்றிக் கூறும் பாமாலை, அல்லது சிவபெருமான் திருவருள் வழி நின்று மொழிந்த பாமாலை. மழலை... பண்ணி பாமாலை சூட்டப்பெற்ற மழலை மொழிபோல் ஒலிக்கின்ற அழகிய சிலம்புகள் அணிந்த திருவடிகளை என் முடியின்மேல் சூடி.

(௩) இதனின் மற்று உண்டே - இதைவிட வேறு உண்டோ? இல்லை. அள்ளூறும் - கசிக்கும். பல் பதக் குவை - பலவகைப்பட்ட (நிதிக்) குவியல். முழுதும் ஆம் - இவை முழுவதும் ஆகும் (சுலப மாகக் கிடைக்கும்).

(௪) ஐய - அழகா. சைவம் விட்டிட்ட - சிவத்தின் தன் மையை வெளிப்படுத்துகின்ற. தரங்கம் - (கங்கையின்) அலை. எண் திக்கும் மொய்கொள் நின்தொண்டர் கண்ட முகம் மலர்ந்து இவற்றைக் கண்ட, எட்டுத் திக்குகளிலும் கூட்டமாகக் கூடியுள்ள உன் தொண்டர்களுடைய முகம் மலர்ந்து. மொட்டிக்கும் - குவியும்.

சுருதிவா னவனும் திருநெ டுமாலாம் சுந்தர விசும்பின் இந்திரனும் பருதிவா னவனும் படர்சடை முக்கட் பகவனும் அகவுயிர்க் கமுதாம் எருதுவா கனனும் எயில்கள்மூன் றெரித்த ஏறுசே வகனுமாம் பின்னும் கருதுவார் கருதும் உருவமாம் கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே. ரு

அண்டமோ ரணுவாம் பெருமைகொண் டணுவோர் அண்டமாஞ் சிறுமைகொண் டடியேன் உண்டவூண் உனக் காம் வகையெனது ள்ளம் உள்கலந் தெழுபரஞ் சோதி கொண்டநாண் பாம்பாம் பெருவரை வில்லிற் குறுகலர் புரங்கள்மூன் றெரித்த கண்டனே நீல கண்டனே கங்கை கொண்டசோ ளேச்சரத்தானே. சு

மோதலைப் பட்ட கடல்வயி றுதித்த முழுமணித் திரளமு தாங்கே தாய்தலைப் பட்டங் குருகியொன் றாய தன்

(ரு) சுருதி வானவன் பிரமன். ஆம் - ஆகும்; ஆவான். பருதி வானவன் - சூரியன். அக உயிர்க்கு அமுதாம் - உயிரினுள்ளே அமுதம்போல் பேரின்ப வுணர்ச்சி தருபவனாவான். ஏறு சேவகனும் ஆம் ஆண் சிங்கம் போன்ற வீரனும் ஆவான். கங்கைகொண்ட சோளேச்சரத்தான் சுருதிவானவன் ஆவான், நெடிய திருமாலா வான்......என்று கூட்டுக.

(சு) வரி 1. சிவபெருமானை நோக்க அண்டங்களெல்லாம் அணுக்களாய்த் தோன்றுமாறு அத்தனை பெரியனும், சிவபெருமானை நோக்க அணுக்கள் அண்டங்கள்போலத் தோன்றும்படி அத்தனை சிறியனும். வரி 2. அடியேன் உண்ட ஆகாரம் உனக்கு ஆகும் வகையாக என்னுள்ளத்தினுள் அத்துவிதமாகக் கலந்து எழுகின்ற மேலான ஒளியே. வரி 3. (வாசுகி என்னும்) பாம்பை வில்லின் நாணாகக்கொண்டு, பெரிய மேரு மலையை வில்லாகக் கொண்டு பகை வருடைய முப்புரங்களை எரித்த. கண்டன் வீரன்

(எ) வரி 1. மோதும் தன் மயுள்ள அலை ளோடுகூடிய கடலினிடத்துத் தோன்றிய பூரணமான ரவாத்தினக் கூட்டமும் அமுதமும் அவ்விடத்தே. தாய் தலைப்பட்டு - தாயைப்போன்ற தலையன்பினைக் காட்டி.

மையி லென்னைமுன் ஈன்ற நீதலைப் பட்டா லியானுமவ்
வகையே திரிசரர் இருவரோ டொருவர் காதலிற்பட்ட
கருணையாய் கங்கை கொண்டசோ ளேச்சரத் தானே. எ

தத்தையங் கனையார் தங்கள்மேல் வைத்த தயாவைநூ
றாயிரங் கூறிட்., த்திலங் கோருகூ றுன்கண்வைத் தவருக்
கமருல களிக்குநின் பெருமை பித்தனென் றொருகாற்
பேசுவ ரேனும் பிழைத்தவை பொறுத்தருள் செய்யு
கைத்தலம் அடியேன் சென்னிமேல் வைத்த கங்கை கொ
டசோ ளேச்சரத் தானே. அ

ப ணிய தழல்காய் பாலளா நீர்போற் பாவமுன்
பறைந்துபா லனைய புண்ணியம் பின்சென் றறிவினுக் கறி
யப் புகுந்ததோர் யோகினிற் போலிந்து நுண் ணி ய
யெனினும் நம்பநின் பெருமை நுன்னிடை யொடுங் நீ
வந்தென் கண்ணினுண் மணியிற் கலந்தனை கங்கை கொண்
டசோ ளேச்சரத் தானே. கூ

---

(எ) நீ தலைப்பட்டால் - நீ வெளிப்பட்டுத் தோன்றினால். யானும்
அவ்வகையே-நானும் உன்னோடு உருகிக் கலந்து ஒன்றாய் விடுவேன்.
திரிசரர் இருவரோடு ஒருவர் - திரிபுர சம்ஹார காலத்தில் தப்பிப்
பிழைத்த மூன்று இராக் தர்கள்; இவர்கள் சிவபெருமானிடத்து
அ ாபு பூண்ட வர் ள். காதலிற் பட்ட கருணையாய் - அன்பிற்கு ஈடு
பட்ட ருணையை யுடையவனே.

(அ) தத் த அங்கனையார் கிளியைப் போன்ற அழகிய
மடந்தையர். தயா - அன்பு. பிழைத்த வ - பிழைகளை. வரி 4.
ன் கை ய என் சிரத்தின்மேல் வைத்து தீட்சைசெய்த.

(கூ) வரி 1-2. பாலோடு கலந்த நீரானது மூட்டிய தீயினால்
காய்ச்சப்ப ட மாத்திரத்தில் பாலைவிட்டு நீங்கிவிடுவதுபோல,
பாவம் முன்னே ஓ பாலைப் போன்ற புண்ணியம் பின்னே சென்று
அறிவினால் அறியும் வகையா என்னுள்ளே புகுந்து, ஒரு யோ
மார்க் த்தில் விளங்கி. வரி 4. நீ மிக எளியையாகி வந்து கண்ணில்
மணி லந்து கிற்ப துபோல் என்னோடு கலந்து நின்றனை.

அங்கைகொண் டமரர் மலர்மழை பொழிய அடிச்சிலம்(பு)
அலம்பவந் தொருநாள் உங்கைகொண் டடியேன் சென்னி
வைத்தென்னை உய்யக்கொண் டருளினை மருங்கிற் கொங்
கைகொண் டனுங்குங் கொடியிடை காணிற் கொடியளென்
றவிர்சடை முடிமேற் கங்கைகொண் டிருந்த கடவுளே
கங்கைகொண் டசோளேச்சரத் தானே. கo

மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை வளரிளந்
திங்களை முடிமேற் கங்கையோ டணியுங் கடவுளைக் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானை அங்கையோ டேந்திப்
பலிதிரி கருவூர் அறைந்தசொன் மாலையா லாழிச் செங்
கையோ டுலகி லரசுவீற் றிருந்து திளைப்பதுஞ் சிவனருட்
கடலே. கக

திருச்சிற்றம்பலம்

(கo) அங்கை - அழகிய கை. அலம்ப - ஒலிக்க. மருங்கில்...... கொடியள் என்று - கொங்கையின் பாரத்தினால் துவளும் கொடி போன்ற இடையையுடைய, பக்கத்தில் இருக்கும் உமாதேவியார் கண்டால் கோபிப்பாள் என்று எண்ணி. அவிர்சடை - பிரகாசிக்கும் சடை.

(கக) மங்கை யோடிருந்தே யோகுசெய்வானை உமாதேவியோ டிருந்தே யோகம் செய்பவனைப்போல் காணப்படுபவனை. வரி 4. சக்கரம் ஏந்திய கையுடன் சக்கரவர்த்தியாய் அரசு செலுத்தி சிவபெருமான் திருவருட் கடலில் மூழ்கியிருப்பர்.

# ௬. திருப்பூவணம்

## பண் - பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

திருவருள் புரிந்(து)ஆள் ஆண்டுகொண் டிங்ஙன் சிறி யனுக் கினியது காட்டிப் பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின் பெருமையிற் பெரியதோன் றுளதே மருதர சிருங் கோங் ககின்மரஞ் சாடி வரைவளங் கவர்ந்திழி வைகைப், பொருதிரை மருங்கோங் காவண வீதிப் பூவணங் கோயில் கொண் டாயே. க

பாம்பணைத் துயின்றோன் அயன்முதல் தேவர் பன் னெடுங் காலம்நிற் காண்பான் ஏம்பலித் திருக்க என்னுாட் புகுந்த எளிமையை யென்று(ம்)நான் மறக்கேன் தேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத் தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும் பூம்பணைச் சோலை ஆவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே. உ

(க) ஆள் ஆண்டுகொண்டு-அடியவனை ஆட்கொண்டு. இனியது காட்டி - இன்பத்தைத் தரும் பொருள் இன்னது என்று தெரி வித்து. உளதே - உண்டோ ? இல்லை. சாடி வரை வளம் கவர்ந்து இழி - அடித்துக்கொண்டு மலையின் மேலுள்ள வளப்பமாகிய பொருள்களை வாரிக்கொண்டு இறங்கி வருகின்ற. பொரு தி ர மருங்கு - அலைகள் மோதுகின்ற கரைகளின் பக்கத்தில், ஓங்கு ஆவண வீதி - பெரிய டை வீதி யயுடைய.

(உ) நிற்காண்பான் - உன்னை காணும் பொருட்டு. ஏம்பலித் திருக்க போாவல் கொண்டிருக்க. வரி 3. இனிப்பாகிய நீ ர குளங்களில் உள்ள வாளைமீன்கள் வாயினால் உட்கொ ள்ளும்படியா தெளிந்ததேன் பாய்ந்து (குளத்தில்) ஒழுகும்படிச் செய்யும். பூம் பணைச் சோலை - அழகிய உயர்ந்த சோலை.

திரைகடல் லொலியில் தமருகத் தரையிற் கையினிற் கட்டிய கயிற்றால் இருதலை யொருநா வியங்கவந் தொருநாள் இருந்திடா யெங்கள்கண் முகப்பே விரிநிகழ் விழவின் பின்செல்வோர் பாடல் வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த புரிசடை துகுக்கும் ஆவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே. ரு

கண்ணியன் மணியின் சூழல்புக் கங்கே கலந்துபுக் கொடுங்கினேற் கங்ஙன் நுண்ணியை யெனினும் நம்பநின் பெருமை நுண்ணிமை யிறந்தமை யறிவன், மண்ணியன் மரபில் தங்கிருள் மொழுப்பின் வண்டினம் பாடநின் றாடும், புண்ணிய மகளிர் ஆவண வீதிப் பூவணங் கோயில்கொண் டாயே. சு

கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர் கள்ளரை மென்னவே துரந்தேன், அடியிணை யிரண்டும் அடையுமா றடைந்

---

(ரு) வரி 1, 2. கடற்கரையில் எழுகின்ற அலைகளின் ஒலியைப் போல், உடுக்கையின் இடையில் பிடித்த கையில் கட்டிய கயிற்றின் நுனியில் உள்ள நாவினால் உடுக்கையின் இரண்டு பக்கங்களிலும் ஓசை உண்டாகும்படியாக ஒருநாள் வந்து எங்கள் கண்முன்பாக இருக்கமாட்டாயா. வரி 3. பரந்து விளங்குகின்ற திருவிழாவின் பின்னே செல்வோர், பாட்டினிடத்து மிக்க விருப்பத்தினால் மயங்கிக் கீழே வீழ்ந்தபோது அவிழ்ந்த முறுக்கோடு கூடிய சடையைக் கட்டுகின்ற. துகுக்கும் - கட்டுகின்ற.

(சு) வரி 1, 2. நீ சோர்ந்த என்னிடத்து கண்ணிற் பொருந்திய மணியின் உள்ளிடத்தில் புகுந்து என்னுடன் கலந்து அவ்வாறு நுட்பமாயிருந்தாலும் இறைவனே . அணு வயும் கடந்து நின்ற உன் பெருந்தன்மை ய அறிவேன். வரி 3. தரையினிடத்து இருள் தங்கும்படி அடர்ந்த சோலைகளில் வண்டுக் கூட்டங்கள் பாட, அவற்றின் அருகே தேவமாதர் நின்று ஆடுகின்ற.

(எ) கடுவினைப் பாசக் கடல் கடந்து - கொடிய வினை என்னும் கயிற்றினாற் கட்டப்பட்டு பிறவிக்கடலுள் வீழ்த்தப்பட்ட நான் அவற்றினின்றும் தப்பி. ஐவர் கள்ளரை மென்னவே துரந்து ஐம்புலன்களாகிய கள்வரை மெதுவா ஓட்டி.

தேன் அருள் செய்வாய் அருள்செயா தொழிவாய் நெடுநிலை
மாடத் திரளிருள் கிழிக்க நிலைவிளக் கலகில்சா லேகம்
புடைகிடந் திலங்கும் ஆவண வீதிப் பூவணங் கோயில்
கொண் டாயே. ரு

செம்மனக் கிழவோ ரன்புதா வென்றுன் சேவடி
பார்த்திருந் தலச எம்மனங் குடிகொண் டிருப்பதற் கியா
ரோ என்னுடை அடிமைதான் யாதே அம்மனங் குளிர்
நாட் பலிக்கெழுந் தருள அரிவையர் அவிழ்குழல் சுரும்பு
பொம்மென முரலும் ஆவண வீதிப் பூவணங் கோயில்
கொண் டாயே. சு

சொன்னவின் முறைநான்(கு) ஆரண முணராச் சூழல்
புக் கொளித்தநீ யின்று கன்னவின் மனத்தென் கண்வலைப்
படுமிக் கருணையிற் பெரியதொன் றுளதே மின்நவில்
கனக மாளிகை வாய்தல் விளங்கிளம் பிறைதவழ் மாடம்

---

(ரு) அருள் செய்வாய் அருள் செயாது ஒழிவாய் நீ அருள் செய்தாலும் செய்யா விட்டாலும் எனக்குச் சம்மதம் தான். நெடு நிலை மாடம் - உயர்ந்த அடுக்குகளையுடைய மாளிகைகள். அலகில் சாலேகம் புடைகிடந்து இலங்கும் - எண்ணில்லாத பலகணி (ஜன்னல்)களின் பக்கத்தில் கிடந்து விளங்கும்படியான.

(சு) செம்மனக் கிழவோர்-செம்மையான (திருந்திய) மனத்தை யுடைய பெரியோர். அன்பு தா - உன்னிடத்து அன்பை எனக்குக் கொடு. "இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார்" பெரியபுராணம். அலச வருந்த. யான் ஆர் - நான் என்ன தகுதி யுடையவன். யாதே என்ன தகுதியுடையது. வரி 3. சிவ பெருமான் பிட்சை ஏற்க எழுந்தருளியபோது, அவரைக் கண்ட மாதர்கள் கூந்தல் (காதலினால்) அவிழ, அவர்கள் கூந்தலில் தரித்த மலர்களில் மொய்த்துக்கொண்டிருந்த வண்டுகள் பொம்மென்று சப்திக்கும். சுரும்பு வண்டு.

(எ) வரி 1. புகழ்ந்து சொல்லும்படியான தகுதியினையுடைய வேதங்களால் எட்டி உணரமுடியாதபடி உள் இடத்தில் ஒளித்துக் கொண்டநீ. கல்நவில் மனத்து என்கண் வலைப்படும் இக்கருணை யில் - கல்லென்று சொல்லும்படி (கல்லைப் போன்ற) கடினமான மனத்தையுடைய என்னுடைய கண்ணாகிய வலையிற் சிக்குண்டு கிடக்கின்ற இந்தக் கருணையைவிட. மின் நவில் மின்னல் என்று சொல்லும் படி அவ்வளவு பிரகாசத்தையுடைய. வாய்தல் - முற்றம்

பொன்நவில் புரிசை யாவண வீதிப் பூவணம் கோயில்
கொண் டாயே எ, அ க

பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட புனிதனை
வனிதை பாகனை வெண் கோவணங் கொண்டு வெண்தலை
யேந்துங் குழகனை யழகெலாம் நிறைந்த தீவணன் தன்னைச்
செழுமறை தெரியுந் திகழ் குரூரனேன் உரைத்த பாவணத்
தமிழ்கள் பத்தும்வல் லார்கள் பரமன தருவமா குவரே.

திருச்சிற்றம்பலம்

## அ திருச்சாட்டியக்குடி

### பண பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பெரியவா கருணை யிளநிலா எறிக்கும் பிறைதவழ்
சடைமொழுப் பவிழ்ந்து சரியுமா சுழியங் குழைமிளிர்ந்
திருபால் தாழ்ந்தவா காதுகள் கண்டங் கரியவா தாமுஞ்
செய்யவாய் முறுவல் காட்டுமா சாட்டியக் குடியார் இருகை
கூம் பினகண் டலர்ந்தவா முகமேழ் இருக்கையி லிருந்தஈ
சனுக்கே. க

---

(எ) வரி 4. பொன் போலும் பிரகாசிக்கின்ற மதில்களையுடைய
டைவீதி. புரிசை - மதில். வாய்தல், மாடம், புரிசை, ஆவண வீதி
ஆகிய இவைகளையுடைய பூவணம் என்று முடிக்க

(க0) பாவணத் தமிழ் - பாட்டின் வண்ணமாயுள்ள தமிழ்
தமிழ்ப் பாட்டுகள். "ஆரூரன் சொன்ன பாவணத் தமிழ் பத்தும்
வல்லார்." சுந்தரர். (ஓவணமேல்).

---

(க) கருணை பெரியவா - உன் கருணை பெரியதாயிருக்கின்றது.
சடைமொழுப்பு சடை முடி. சுழியம் சரியுமா - உச்சிக்கொண்டை
சரிகின்றது. செய்யவாய் முறுவல் காட்டுமா - சிவந்த வாயில் புன்
னகை தவழ்கின்றது. ஏழ் இருக்கையில் இருந்த ஈசனுக்கே கருணை
பெரியவா, சுழியம் சரியுமா......என்று கூட்டுக. ஏழ் இருக்கை -
சாட்டியக்குடியிலிருக்கும் திருக்கோயிலுக்குப் பெயர். வரி 4.
இறைவனை வணங்கும்பொருட்டு, சாட்டியக்குடி அடியார் குவித்த
கைகளைக் கண்டு ஏழிருக்கையில் இருந்த ஈசனுக்கு முகம் மலர்ந்தது.

பாந்தள்பூ ணாரம் பரிகலங் கபாலம் பட்டவர்த் தனம்
எருது அன்பர், வார்ந்தகண் அருவி மஞ்சன சாலை மலை
மகள் மகிழ்பெருந் தேவி சாந்தமுந் திருநீ றருமறை
கீதஞ் சடைமுடி சாட்டியக் குடியார் ஏந்திழில் இதயம்
கோயில்மா ளிகையேழ் இருக்கையு ளிருந்த ஈசனுக் கே. ௨

தொழுதுபின் செல்வ தயன்முதற் கூட்டந் தொடர்
வன மறைகள்நான் கெனினுங் கழுதுறு கரிகா டுறைவிடம்
போர்வை கவந்திகை கரியுரி திரிந்தூண் தழலுமிழ் அரவங்
கோவணம் பளிங்கு செபவடஞ் சாட்டியக் குடியார் இழுது
நெய் சொரிந்தோம் பழலொளி விளக்கேழ் இருக்கையி
லிருந்த ஈசனுக் கே. ௩

பதிகநான் மறைதும் புருவு நாரதரும் பரிவொடு பாடு
காந் தர்ப்பர் கதியெலாம் அரங்கம் பிணையன்மூ வுலகிற் கடி
யிருள் திருநடம் புரியுஞ் சதியிலார் கதியி லொலிசெயுங்

---

(௨) வரி 1,2. ஏழ் இருக்கையில் இருந்த ஈசனுக்குப் பூண்கின்ற மாலை பாம்பு, உண்ணும் பாத்திரம் மண்டைஓடு, பட்டத்து யானை எருது, மஞ்சனசாலை (நீராடும் இடம்) அன்பர்கள் கண்களினின்றும் பெருக்கெடுத்து ஓடுகின்ற அருவி. வரி 4. சாட்டியக்குடி அன்பர்களுடைய அழகு மிக்க இருதயம் ஈசன் வசிக்கும் அரச மாளிகை போன்ற கோயில்.

(௩) வரி 2,3. ஈசனுக்கு உறைவிடமாயிருப்பது பேய்கள் வசிக்கும் சுடுகாடு, போர்த்துக்கொள்ளும் போர்வை யானைத்தோல், கவந்திகை (உண்ணும் உணவு) திரிந்து ஏற்கும் பிக்ஷை, கட்டியிருக்கும் கோவணம் நெருப்புபோன்ற விஷத்தைக் கக்கும் பாம்பு, செபமாலை பளிங்குமாலை. வரி 4. இளகிய நெய்யைச் சொரிந்து வளர்க்கின்ற ஓமத் தீயின் ஒளியானது ஈசனுக்கு விளக்காகும்.

(௪) பதிகம்......அரங்கம் ஏழிருக்கையில் இருந்த ஈசனுக்கு பாடும் பாட்டுகள் நான்கு வேதங்களாகும்; தும்புருவும் நாரதரும் அன்போடு பாடுகின்ற கந்தர்ுவராவர்; எல்லா உயிர்களுக்கும் பு லிடமாயிருப்பது அவர் நடனசாலை. மூவுலகில் கடியிருள் பிணையல் திருநடம் புரியும் - மூன்று உலகங்களிலும் மிகுந்த இருளில் இரண்டு கைகளினாலும் அபிநயம் காட்டித் திருநடனம் செய்வார். சதியில் ஆர்கதியில் கையில் தமருகம் ஒலி செயும் - தாளவொத்தோடு கூடிய அவருடைய நட த்தில் அவர் யில் பிடித்திருக்கும் உடுக்கை தானே ஒலி செய்துகொண்டிருக்கும். பிணையல் - இரண்டு கைகளாலும் அபிநயம் காட்டுதல். தமரு ம் - உடு .

யில் தமரு ஞ் சாட்டிய குடியார் இதயமாங் கமல
மலவர்த் தணையேழ் இருக்கையி லிருந்தா சனுக்கே. ௪

திருமகன் முருகன் ே, விமயல் உமையாள் திருமகள் மருமகன் தாயாம் மருமகன் மதனன் மாமனேல் இமவான் மலையுடை யரையர்தம் பாவை தருமலி வளஞ் சிவபுரன் தோழன் தனபதி சாட்டியக் குடியார் இருமுகங் கழல் மூன் றேழுை த் தலமேழ் இரு ை யி லிரு் தா சனுக்கே. ௫

அனலமே புனலே யனிலமே புவனி அம்பரா அம்பரத் தளி குங் னகமே வெள்ளிக் குன்றமே யென்றன் களை ணே களைகண்மற் றில்லாத் தனியனே னுள்ள கோயில் ெ ாண் டருளுஞ் சைவனே சாட்டியக் குடியார்க் கினியதிங் கனியாய் ஒழிவற நிறைந்தே ழிருக்கையி லிருந்தவா றியம்பே. ௬

(௪) வரி 4. சாட்டியக்குடி அடியார்க இதயகமலம் கமலாசன மாகும்.

(௫) திருமகள் மரும ன் தாயாம் மருமகன் மதனன் - மன்மதன் சிவபெருமானுடைய மருமகனுவான்; இலக்குமி மன்மதனுக்குத் தாயாவாள். மலையுடை அரையர்தம் பாவை தரும் மலிவளன் ஆம் தனபதி சிவபுரன் தோழன் - பர்வதராஜன் புத்திரி (பார்வதி தேவியார்) தருகின்ற மிக்க செல்வத்தினுல் தனபதியாகிய குபேரன் சிவபெருமானுக்குத் தோழன் ஆவான். இருமுகம் கழல் மூன்று ஏழு த்தலம் இவை அக்கினி தேவனுக்கு உண்டு. இத்தலத்தில் சிவபெருமான் அக்கினிதேவன் வடி த்துடன் இருப்பதால் இரண்டு மு ங்களும் மூன்று ால் ளும் ஏழு கைகளையுமுடையவ ா ச் சி பெருமானைக் கூறப்பட்டுள்ளது.

(௬) அனலம் - நெருப்பு. அனிலம் காற்று. புவனி உலகம், ண். அம்பரம் ஆ ாயம். களைகண் - ஆதரவு. சாட்டியக்குடியார்க்கு - திருச்சாட்டியக்குடியிலுள்ள அடியவர்களுக்கு.

செம்பொனே பவளக் குன்றமே நின்ற திசைமுகன் மால்முதற் கூட்டத்(து) அன்பரா னவர்கள் பருகும் ஆர் அமுதே யத்தனே பித்தனே னுடைய சம்புவே யணுவே தாணுவே சிவனே சங்கரா சாட் டியக் குடியார்க் கின்பனே யெங்கும் ஒழிவற நிறைந்தே யிருக்கையி லிருந்தவா றியம்பே. எ

செங்கணு போற்றி திசைமுகா போற்றி சிவபுர நகர்வீற் றிருந்த, அங்கணு போற்றி அமரனே போற்றி அமரர்கள் தலைவனே போற்றி தங்கள்நான் மறைநூல் சகல முங் கற்றோர் சாட்டியக் குடியிருந் தருளும் ங்கள் நாய கனே போற்றியே யிருக்கை இறைவனே போற்றியே போற்றி. அ

சித்தனே யருளாய் செங்கணு அருளாய் சிவபுர நகருள் வீற்றிருந்த அத்தனே யருளாய் அமரனே யருளாய் அம ரர்கள் அதிபனே யருளாய் தத்துநீர்ப் படுகர்த் தண்டலைச் சூழற் சாட்டியக் குடியுளே யிருக்கை முத்தனே யருளாய் முதல்வனே யருளாய் முன்னவா துயர்கெடுத் தெனக்கே. கூ

---

(எ) கூட்டத்து அன்பரானவர்கள் பருகும் ஆரமுதே - கூட்டத்தினுள் சிவபெருமானிடத்து அன்புடையரா யிருப்பவர்கள் அனுபவிக்கின்ற பேரின்ப உணர்வாயிருப்பவனே. தாணு அழிவில்லாதவன்.

(அ) செங்கணு சிவந்த கண்ணையுடைய திருமாலே. திசை முகா நான்கு முகங்களையுடைய பிரமனே. அங்கணு அழகிய கிருபா நோக்கமுடையவனே. அமரனே இறப்பில்லாதவனே. அம ரர்கள் தலைவனே - தேவர்களுக்குத் தலைவனுயிருக்கப்பட்டவனே. சிவபெருமானே எல்லாத் தேவருமாய் இருக்கின்றார் என்று இச் செய்யுள் தெரிவிக்கின்றது.

(கூ) வரி 3. குதித்தோடுகின்ற நீரையுடைய வயல்களும் சோலைகளும் சூழ்ந்துள்ள சாட்டியக்குடி. படுகர் - குளம், வயல். தண்டலை - சோலை. முன்னவா துயர்கெடுத்து எனக்கு - எல் லாப் பொருளுக்கும் முன்னுயிருப்பவனே. என்னுடைய துன்பத் தைப் போக்கி; அல்லது எனக்கு முற்பட்டு நிற்கும் ஆசை யையும் துன்பத்தையும் போக்கி.

தாட்டரும் பழனப் பம்பொழிற் படுகர்த் தண்டலைச்
சாட்டியக் குடியார் ஈட்டிய பொருளா யிருக்குமே ழிருக்கை
யிருந்தவன் திருவடி மலர்மேற் காட்டிய பொருட்கலை பயில்
கருவூரன் கழறுசொன் மாலையீ ரைந்து மாட்டிய சிந்தை
மைந்தருக் கன்றே வளரொளி விளங்குவா னுலகே. ௧௦

திருச்சிற்றம்பலம்

## ௯ தஞ்சை இராசராசேச்சரம்

பண் - பஞ்சமம

திருச்சிற்றம்பலம்

உலகெலாந் தொழவந் தெழுகதிர்ப் பருதி ஒன்று
நூறாயிர கோடி அலகெலாம் பொதிந்த திருவுடம் பச்சோ
அங்ஙனே அழகிதோ அரணம் பலகுலாம் படைசெய் நெடு

---

(௧௦) தாள்தரும் பழனம் - அருவினை பாய்வதால் (நல்ல விளை வைக்) கொடுக்கும் வயல்; அல்லது உழைப்புக்குத் தக்க பலனைக் கொடுக்கும் வயல் என்னலுமாம். தாள் - அருவி முயற்சி. வரி 3-4. மேலான பொருளைக் காட்டும்படியான நூல்களில் பயிற்சியுள்ள கருவூர்த் தேவர் சொல்லிய பாமாலை பத்தும் சிந்தையிற் பதித்த மனிதருக்கு அல்லவா ஒளி வளர்ந்து பிரகாசிக்கின்ற சிவலோகம் (சித்திக்கும்).

(௧) பருதி - சூரியன். நூறாயிர கோடி ஒன்று - எண்ணில்லாதன ஒன்றுசேர்ந்த. அலகு எல்லாம் பொதிந்த - அழகு அல்லது பரப்பு எல்லாம் திரண்டதுபோன்ற மிக் ஒளியுடைய. திருவுடம்பு அங்ஙனே அழகிது அச்சோ - திருமேனியனது அவ்விதமா அழகாயிருக்கின்றது. இது என்ன அதிசயம். ஓ - அசை. அரணம் - கோட்டை. பல குலாம் படைசெய் பல ஒன்றோடொன்று நெருங்கிக் காவல் செய்கின்ற.

நிலை மாடம் பருவரை ஞாங்கர் வெண்திங்கள் இலைகுலாம்
பதணத் திஞ்சிசூழ் தஞ்சை இராசராசேச்சரத் திவர்க்கே.

நெற்றியிற் கண்என் கண்ணின்நின் றகலா நெஞ்சினில்
அஞ்சிலம் பலைக்கும் பொற்றிரு வடியென் குடிமுழு தாளப்
புகுந்தன போந்தன இல்லை மற்றெனக் குறவென் மறிதிரை
வடபாற் றிடுபுனல் மதகில்வாழ் முதலை எற்றுநீர்க் கிடங்கில்
இஞ்சிசூழ் தஞ்சை இராசராசேச்சரத் திவர்க்கே. ௨

சடை கெழு மகுடம் தண்ணிலா விரிய வெண்ணிலா
விரிதரு தாளக் குடைநிழல் விடைமேற் கொண்டுலாப்
போதுங் குறிப்பெ(ன்)னோ கோங்கிணர் அனைய குடைகெழு
நிருபர் முடியொடு முடிதேய்ந் துக்கசெஞ் சுடர்ப்படு குவை

(க) நெடுநிலை மாடம் பருவரை ஞாங்கர் - உயர்ந்த அடுக்குக ளோடு கூடிய உப்பரிகைகளான பெரிய மலைகளின் பக்கத்தில். ஞாங்கர் - பக்கம். வெண்திங்கள்...........தஞ்சை இராசராசேச் சரத்து இவர்க்கே - இலைபோன்ற வெண் சந்திரன் சஞ்சரிக்கின்ற உயர்ந்த மேடையோடு கூடிய மதில்களால் சூழப்பட்டுள்ள தஞ்சை மாநகரில் இராசராசேச்சரம் என்னும் திருக்கோயில் கொண்டுள்ள இவர்க்கே. பதணம் - மதிலின் உள்மேடை. இஞ்சி - மதில். இராசராசேச்சரத்திவர்க்கு திருவுடம்பு அழகிது - என்று கூட்டுக.

(உ) நெஞ்சில்.........போந்தன இல்லை - அழகிய சிலம்புகள் ஒலிக்கின்ற பொன்மயமான திருவடிகள் என் குடும்பம் முழுவதை யும் ஆளும்பொருட்டு என் நெஞ்சினுள் புகுந்த . வெளியே வர வில்லை. மற்று எனக்கு உறவு என் - வேறு உறவினர் எனக்கு எதற்கு ? மறிதிரை வடபால் திடுபுனல்...இஞ்சிசூழ் - வடபக்கத் தில் மடங்கும்படியான அலைகளோடு கூடிய நீர் ஒலிசெய்து விழும் படியான மதகில் வாழ்கின்ற முதலை வாரி எறிகின்ற நீரையுடைய அகழியோடு கூடிய மதில்களாற் சூழப்பட்டுள்ள. இஞ்சி - மதில்.

(௩) சடைகெழு மகுடம் தண் நிலா விரிய - பிரகாசிக்கும் சடா மகுடத்தினின்று குளிர்ச்சி பொருந்திய நிலவொளி பரவ. தர ளம் - வெண்மை, முத்து. உலாப்போதும் - பவனி வருகின்ற. குறிப்பு எ(ன்)னோ கருத்து யாதோ. கோங்கு இணர் கோங்கு மலர்க்கொத்து. நிருபர் - அரசர். முடி - கிரீடம். உக்க......இடை கெழு - சிந்திய சிவந்த ஒளியை வீசும் மணிக்குவியல்கள் உயர்ந் துள்ள இடம் பொருந்திய.

யோ கிடைகெழு மாடத் திஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் தி ர்க்கே. ௩

வாழியம் போதத் தருகுபாய் விடையம் வரிசையின் விளக் கின் அடுத்த சூழலம் பளி கின் பாசல ராதிச் சுடர் விடு மண்டலம் பொலிய காழகில் மழும் மாளிகை மகளிர் கங்குல்வா யங்குலி கெழும யாழொலி சிலம்பும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே . ௪

எவரும்மா மறை ளவையும்வா னவர் ள் ஈட்டமுந் தாட்டிரு கமலத் தவரும்மா லவனும் அறிவரும் பெருமை அடலழல் உமிழ்தழற் பிழம்பர் உவரிமா டலி ஞெலிசெய் மாமறுகி லுறு ளிற் றரசின திட்டம் இவருமால் வரைசெய் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே. ௫

---

(௪) அம்போதத்து அருகு பாய்விடை அம் வரிசையின் விளக்கலின் அடுத்த சூழல் அம் பளிங்கின் பாசலர் ஆதிச்சுடர் விடு மண்டலம் பொலியக் காழ் அகில் கமழும் மாளி கங்குல்வாய் ம ளிர் அங்குலி ழும யாழ்ஒலி சிலம்பும் - மேகங்களின் அருகே பாய் கின்ற இடபத்தை ஒத்த தோற்றத்தையுடைய அழகிய விளக்கு களின் வரிசையின் பக்கங்களில் சூழ்ந்துள்ள பளிங்குக் கற்களினின் றும் விடப்பட்ட ஒளியானது மண்டலங் ளில் பிரகாசிக் , வயிரத் தோடு கூடிய அகிற்கட்டைகளின் புகை யினுல் மணம்வீசும் மாளிகை களினிடத்து இரவில் பெண் ள் தங் ள் விரல்கள் விளங்கும்படி யாழை மீட்டுவதனுல் இன்னிசை ஒலிக்கும். இச்செய்யுளுக்குப் பொருள் நன்று விளங் வில்லை. பாடபேதம் இருக்குமோ என்னும் ஐயப்பாடு உளது.

(௫) வரி 1 2. எப்படிப்பட்ட பெருமை உடையவராலும், பெரிய வேதங் ள் எவற்றாலும் தேவர்கள் கூட் ங் ளாலும் த டினையுடைய தாமரைமலர்மேல் உ றயும் பிரமதேவனுலும் திருமாலாலும் அறியமுடியாத பெரு மயுடைய வலிய அ கினி ய உமிழும்படியான நெருப்புத் தம்பமாய் நின்றவர். ரி 3 4. உவர்ப் பாகிய பெரிய டலின் ஒலியைப் போன்று சப்தி கின்ற தெரு ரில் சஞ்சரி கின்ற அரசயானை ரின் கூட்டம் உலாவுகின்ற பெரிய மலையைப் போன்ற தோற்றத்தையுடையது. மறுகு வீதி. இவரும் உலாவும்.

அருளுமா றருளி ஆளுமா றாள அடிகள்தம் அழகிய
விழியுங் குருளும்வார் காதுங் காட்டியான் பெற்ற குயி
லினை மயல்செய்வ தழகோ தாரளவான் குன்றில் தண்
நிலா ஒளியுந் தருகுவால் பெருகுவான் தெருவில் இரு
ளொலாங் கிழியும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத்
திவர்க்கே. சு

தனிப்பெருந் தாமே முழுதுறப் பிறப்பின் தளிரிறப்
பிலைஉதிர் வென்றால் நினைப்பருந் தம்பாற் சேறலின்றேனும்
நெஞ்சிடிந் துருகுவ தென்னோ சுனைப்பெருங் லங்கற்
பொய்கையங் கழுநீர்ச் சூழன்மா ளிகைசுடர் வீசும் எனைப்
பெரு மணஞ்செய் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத்
திவர்க்கே. எ

---

(சு) குருள் முன்கொண்டை ' சடை முடி. வார் காது - நீண்ட ாது. யான் பெற்ற குயிலினை மயல் செய்வது அழகோ - நான் பெற்ற குயில்போலும் இனிய குரலையுடைய பெண்ணை மையல் செய்வது அழகாகுமோ? தாள வான் குன்றில்......இருளெலாம் கிழியும் - பெரிய தெருக்களில் உள்ள முத்துக்குன்றினை ஒத்த பெரிய குவியல்களினின்று வெளிவருகின்ற குளிர்ந்த நிலவு ஒளியினால் இருள் முழுமையும் நீங்கும்படியான. கிழியும் - நீங்கும்.

(எ) வரி 1, 2. ஒப்பற்ற பெருமையுடைய தாமே எல்லாப் பொருள்களிலும் பொருந்தியிருக்க, பிறப்பு இனிய தளிரைப் போன்றும் இறப்பு இலை உதிர்தலைப் போன்றும் ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்வதானால், மனதினால் நினைக்கமுடியாத தம்மிடத்துச் செல்லுதல் இப்போது நிகழாவிட்டாலும் மனம் உடைந்து வருந்துவ து   ன்ன   ாரணம்? வரி 3 4, நீரூற்றினையும் நீர்பாயும் மதகினையுமுடைய தடா த்திலுள்ள அழகிய கழுநீர் மலர்கள் சூழ்ந்துள்ள ஒளி பொருந்திய மாளிகை ளில் மிக்க வாசனையைச் செய்யும் ' மதில்களாற் சூழப்பட்ட அத்தன் ம வாய்ந்த மா ரி கூ யு டய தஞ்சை இராசராசேச்சரத்து சி பெருமானுக்கு.

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர் தாம்பலர் ஏம்பலித் திருக்க என்னெடுங் கோயில் நெஞ்சுவீற் றிருந்த கள்ளமை யை என்றும்நான் மறக்கேன் மின்னெடும் புருவத் திளமயி லனையார் விலங்கல்செய் நாடக சாலை இன்னடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே.

மங்குல்சூழ் போதின் ஒழிவற நிறைந்து வஞ்சகர்நெஞ் சகத் தொளிப்பார் அங்கழல் சுடராம் அவர்க்கிள வேனல் அலர் கதிர் அனையவா ழியரோ பொங்கெழில் திருநீ றழி பொசி வனப்பில் புனல்துளும் பவிர்சடை மொழுப்பர் எங் களுக் கினியர் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே. க

---

(அ) ஏம்பலித்து: (உன்னைக் காணும் பொருட்டு) வருந்திக் கொண்டு. நெடுங்கோயில் என் நெஞ்சு - பெரிய கோயிலாக என் மனதினிடத்து. விலங்கல் செய் நாடகசாலை - மலையைப் போன்று உயர்ந்துள்ள நடனம் செய்யும் மாளிகை(யினிடத்து).

(க) ஒழிவற நிறைந்து மங்குல் சூழ்போதின் வஞ்சகர் நெஞ் சகத்தொளிப்பார் - நீக்கமற நிறைந்து மேகங்களாற் சூழப்பட்ட காலத்து சூரியன் ஒளி மறைந்திருப்பது போல வஞ்சகருடைய மனத்தினிடத்துக் காணப்படாமல் ஒளித்துக்கொண்டிருப்பார். அம் கழல் சுடராம் அவர்க்கு இளவேனில் அலர்கதிர் அனைய வாழியர் - அழகிய திருவடி ஒளியில் (அருளொளியில்) மூழ்கிய அடியவர் களுக்கு இளவேனிற் காலத்தில் உதித்த சூரியனைப் போன்று வாழ்விக்குந் தன்மையர். ஓ அசை. வரி 3. அழகு மிக்க திருநீற்றுக் கோலத்தை அழிக்கும்படி அழகிய கங்கை நீர் தளும்பிக் கசிகின்ற ஒளி விளங்கும் சடைக் கற்றையை யுடையவர். எங்களுக்கு இனியர் (வஞ்சகமற்ற) அடியார்களாகிய எங்களுக்கு இன்பத்தைத் தருபவர்.

தனியனேத் தனையொ ராயிர ருமாம் தன்மையர் எ
வயத் தினராம் கனியரத் தருதீ கரும்பர்வெண் புரிநூற்
ட்டியர் அட்டஆர் அமிர்தர். புனிதர்பொற் கழலர் புரிசடா
மகுடர் புண்ணியர் பொய்யிலா மெய்யர்க் கினியரேத் தனை
யும் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா சேச்சரத் திவர்க்கே க0

சாளமந் தார ச பகவகுள சந்தன நந்தன வனத்
தின் இருள்விரி மொழுப்பின் இஞ்சிசூழ் தஞ்சை இராசரா
சேச்சரத் திவரை அருமருந் தருந்தி 'ல்லல்தீர் கருவூர்
அறைந்தசோல் மாலை ரைந்தின் போருள்மருந் துடை
யோர் சிவபத மேன்னும் போன்னேடுங் குன்றுடை
யோரே க

திருச்சிற்றம்பலம்

(க0) வரி 1. ஒன்ருயிருப்பவர், ஆயிரம் வடிவம் கொள்ளும் தன்மையுடையவர் ; என் வசப்பட்டவராவர். கனியர் அத்து அரு தீங் கரும்பர் - னியைப் போன்றவர். அரிய இனிய கரும்பு போன்ற ர். அத்து - சாரியை. வெண்புரிநூல் கட்டியர் - வெண்மை யான முறுக்கிய பூணூலை அணிந்தவர். அ டஆர் அமிர்தர் ாய்ச் சின அரிய அமுதம் (பால்) போன்றவர். எத்தனையும் இனியர் மிகவும் இனியவர்.

(கக) சாளம் முதலியன வாசனைப் பூக் ளையுடைய மரங் ள். இருள் விரி மொழுப்பின் சாள......இஞ்சி சூழ் - இருளைப் பரப்பும் படி அடர்த்தியாயுள்ள சாளம் முதலிய மரங்களையுடைய நந்தன வனத்தாலும் மதில்களாலும் சூழப்பட்டுள்ள. வரி 3. அரிய (பிறவிப் பிணிக்கு) மருந்தாகிய சி பிரான் திருவருளைப் பருகித் துன்ப நீங்கப்பெற்ற கருவூர்த்தேவர் பாடிய பாமாலையாகிய இந்த பத்து பாட்டுகளின் பொருளாகிய மருந் த உண்பவர் ள் (உ ர்பவர் ள்). இராசராசேச்சரத்திவ ர அறைந்தசொல் என்று கூட்டு .

# ௯0 திருவிடைமருதூர்

பண - பஞ்சமம

*திருச்சிற்றம்பலம்*

வெய்யசெஞ் சோதி மண்டலம் பொலிய வீ கிருள் நடுநல்யா மத்தோர் பையசெம் பாந்தள் பருமணி மிழ்ந்து பாவியேன் ாதல்செய் காதில் ஐயசெம் பொற்றோட் டவிர் சடை மொழுப்பின் அழிவழ கியதிரு நீற்று மையசெங் ண்டத் தண்டவா னவர்கோ ர மருவிடம் திருவிடை மருதே. க

இந்திர லோக முழுவதும் பணிகேட் டிணையடி தொழு தேழத் தாம்போய் ஐந்தலை நாகம் மேகலை அரையா அகந் தோறும் பலிதிரி அடிகள் தந்திரி வீணை கீதமும் பாடச் சாதிகின் னரங்கலந் தொலிப்ப மந்திர கீதந் தீங்குழ லெங்கும் மருவிடம் திருவிடை மருதே. உ

---

(க) பொழிப்புரை. இருள் மிகுந்த நல்ல நடு இரவில் ஒரு படத்தையுடைய செந்நாகம் உமிழ்ந்த பெரிய மாணிக்கத்தால் உண் ாகும் பிரகாசம் பொருந்திய சிவந்த ஒளிவட்டம் போன்று பாவி யேனால் காதலிக்கப்பட்ட சிவபெருமான் ாதில் அணிந்த செம் பொன்னாலாகிய அழகிய தோடு விளங்குகின்றது. அத்தகைய தோட் டிணையும், சடைமுடியினையும் மிக் அழகிய திருநீற்றுக் கோலத் தினையும், விஷத்தால் கருநிறம் பொருந்திய சிவந்த கழுத்தினையும் உடைய அண்டங்களில் வாழும் தேவர்களுக்குத் தலைவனாகிய சிவ பெருமான் சேர்ந்திருக்கும்படியான இடம் திருவிடைமருது ஆகும். அழிவு அழகு - மிக்க அழகு.

(உ) ஐந்தலை நா ம் மேகலை அரையா ஐந்து தலை நாகத் த இடுப்பில் மேகலை போன்று ட்டி. தந்திரி வீணை கீதமும் பாட வீணையின் நரம்பு இசையை எழுப்ப. சாதி கின்னரம் - ஒருவித இசைக் ருவி. மந்திர கீதம் தீங்குழல் மந்திர ரூபமா இ சப் பாட்டு ளும் இனிய குழலோ சயும்.

பனிபடு மதியம் பயில்கொழுந் தன்ன பல்லவம் வல்லி யென் றிங்ஙன் வினைபடு கனகம் போலயா வையுமாய் வீங் குல கொழிவற நிறைந்து துனிபடு கலவி மலைமக ளுட னுய்த் தூங்கிருள் நடுநேல்யா மத்தென் மனனிடை அணுகி நுணுகியுள் கலந்தோன் மருவிடம் திருவிடை மருதே ௩

அணியுமிழ் சோதி மணியினுள் ளலந்தாங் கடியனேன் உள்கலந் தடியேன் பணிமகிழ்ந் தருளும் அரிவைபா கத் தன் படர்சடை விடம்மிடற்றடிகள் துணியுமி ழாடை அரை யிலோ ராடை சுடருமிழ் தரஅத னருகே மணியுமிழ் நாக மணியுமிழ்ந் திமைப்ப மருவிடம் திருவிடை மருதே. ௪

பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவற் படிவழி சென்று சென்றேறிச் சிந்தையுந் தானுங் கலந்ததோர் கலவி தெரியினுந் தெரிவுறு வண்ணம் எந்தையுந் தாயும் யானுமென் றிங்ஙன் எண்ணில்பல் லூழிக ளுடனுய் வந்தணு காது நுணிகியுள் கலந்தோன் மருவிடம் திரு விடை மருதே. ௫

(௩) வரி. 1 ௨. குளிர்ச்சி பொருந்திய சந்திரனுடைய கொழுந்து என்று சொல்லத் தகுந்த தளிர் கொடி போன்று பல பொருள்களாகச் செய்யப்படுகின்ற ஒரே பொருளாகிய பொன் னைப் போன்று எல்லாப் பொருள்களுமாய். வீங்கு உலகு - பெரிய உலகம். துனிபடு கலவி - ஊடலோடு கூடிய இன்ப நுகர்ச்சி. ஊடு தல் காமத்திற் கின்பம் திருக்குறள். தூங்கு இருள் - பேரிருள்.

(௪) அணி உமிழ் - அழகு மிக்க. துணி உமிழ் ஆடை அரையில் ஓர் ஆடை சுடர் உமிழ்தர - ஒளி வீசுகின்ற உடையைத் தரித்த அரை யின்மீது ஆடை ஒன்று ஒளியை[illegible]க்க. மணி உமிழ்...இமைப்ப மாணிக்கத்தைக் கக்குகின்ற நாகம் மிக்க அழகுடன் பிரகாசிக்க.

(௫) வரி 1. மலத்தோடு கட்டப்பட்டிருக்கும் நிலையும், மலத்தை விட்டு நீங்கும் நிலையும் (முத்திப் பேற்றையும்) தெரிவிக்கும் பொருளையுடைய ஞான நூல் களிற் சொன்ன வழியிலே நடந்து சென்று சிறிது சிறிதாக மேல்நிலையை யடைந்து. கலவி - கலப்பு. தெரியினும் தெரிவுறுவண்ணம் - சிறிது அறிந்தாலும், முற்றிலும் அறியாதபடி; எந்தையும் தாயும் யானும் என்று இங்ஙன் - எனக் குத் தந்தையாகவும் தாயாகவும் இவ்வாறாக. வந்து அணுகாது - வெளிப்பட்டு வந்து நெருங்காமல். நுணுகி உள் லந்தோன் - நுட்ப மாகி என்னுள்ளே லந்திருக்கின்றவன்.

எரிதரு கரிகாட் டிடுபிணம் நிணமுண் டேப்பமிட் டிலங்கெயிற் றழல்வாய்த் தருழல் பெடும்பேய் கணமெழுந் தாடுந் தூங்கிருள் நடுநல்யா மத்தே அருள்புரி முறுவல் முகிழ்நிலா எறிப்ப அந்திபோன் றொளிர்திரு மேனி வரி யரவு ஆட ஆடுமெம் பெருமான் மருவிடம் திருவிடை மருதே கூ

எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின் இன்துளி படநனைந் துருகி அழலையாழ் புருவம் புனலொடுங் கிடந் தாங்(கு) ஆதனேன் மாதரார் கலவித் தொழிலை யாழ்நெஞ் சம் இடர்ப்படா வண்ணந் தூங்கிருள் நடுநல்யா மத்தோர் மழலையாழ் சிலம்ப வந்(து)அகம் புகுந்தோன் மருவிடம் திரு விடை மருதே எ

---

(கூ) எரிதரு - எரிகின்ற. கரிகாடு - சுடுகாடு. எயிறு - பல். தரு - நெருங்கக் கட்டிய. அருள்புரி முறுவல் - அருள் செய்வதைக் குறிக்கும் புன்சிரிப்பு. முகிழ்நிலா எறிப்ப இளஞ் சந்திரனைப் போன்று ஒளிவீச. அந்தி - செவ்வானம். திருமேனி வரி அரவு ஆட திருமேனியில் அணிந்த கீற்றுகளோடு கூடிய பாம்புகள் ஆட.

(எ) வரி 1, 2. எழில் ஐஆழ் செய்கைப் பசுங்கலன் விசும்பில் இன்துளிபட நனைந்துருகி அழலை ஆழ்பு உருவம் புனலொடும் கிடந் தாங்கு ஆதனேன் மாதரார் கலவித் தொழிலை ஆழ் நெஞ்சம் இடர் படா வண்ணம் - அழகு மிக்க ஆழமாகச் செய்யப்பட்ட பச்சை மட் லங்கள் ஆகாயத்தினின்று மழைத் துளியில் பட்ட அளவில் நனைந்து ரைந்துபோக, நெருப்பில் அம்மட் லங்கள் மூழ்கின பின்னர் நீரிற் கிடந்தாலும் கெடாதவாறு போல மாதர்களோடு கலவித் தொழிலில் ஆழ்ந்து கிடந்த மூடனேனுடைய நெஞ்சம் உன் அருட்பெருந்தீயில் மூழ்கிய பிறகு சிற்றின்ப அனுபவத்தால் விளையும் துன்பம் வந்து தாக்காதபடி. எழிலை ஆழ் செய்கை - அழகையும் தோற்கச் செய்யும் செய்கையையுடைய (மிக்க அழகு பொருந்திய) என்னலுமாம்.

வையவாம் பெற்றம் பெற்றமே றுடையார் மாத ர் காதல்வைத் தென்னை வெய்யவாம் செந்தீப் பட்டஇட் டிகைபோல் விழுமியோன் மு 'புபின் பென்கோ நொய்ய வாறென்ன வந்துள்வீற் றிருந்த நூறுநூ றுயிரகோடி மையவாங் கண்டத் தண்டவா னவர்கோன் மருவிடம் திரு விடை மருதே. அ

கலங்கலம் போய்கைப் புனற்றெளி விடத்து' கலந்த மண் ணிடைக்கிடந் தாங்கு நலம்கலந் தடியேன் சிந்தையுட் புகுந்த நம்பனே வம்பனே னுடைய புல' லந் தவமே யென்றுநின் றுருகிப் புலம்புவா ரவம்புகா ரருவி மலங் லங் கண்ணிற் கண்மணி யனையான் மருவிடம் திருவிடை மருதே. கூ

---

(அ) வரி 1. வைஅவாம் பெற்றம் பெற்றம் ஏறு உ டயார் வைக்கோலை விரும்பும் எருதின்மேல் ஏறி 'ெ ாண்டிருக்கும் சிவ பெருமான். வரி 2. கொடிய செந்தீயினால் சுடப்ப' ட செங்கற் களைப் போல மாறுபட 'த உண்ணம் என்னைச் செய்து மேன்மை பொருந்திய சிவபெருமான் எனக்கு முன்னும் பின்னும் ள்ளான் என்று சொல்லும்படி. இட்டிகை - செங்கல். நொய்யவாறென்ன எளிமையாக. மை அவாம் கண்டம் - மை விரும்பும் (அஞ்ச ம் போன்ற கரிய) கழுத்து. நூறு நூறுயிரகோடி அண்டவானவர் ே ான் எனக் கூட்டுக.

(கூ) வரி 1, 2. கலங்கலாக உள்ள குளத்து நீரைத் (தேற்றாங் கொட்டை முதலியவற்றால்) தெளியச்செய்த விடத்து, நீருடன் லந்திருந்த மண் அடியிற் கிடந்தவாறுபோல நன்மை யத் தரும் திருவருளை என்னுடன் கூட்டி அடியேனுடைய சிந்தையுட் புகுந்த டவுளே. லங் ல் நீர் ஆன்மாவிற்கும், மண் மும்மலத்திற் கும், திருவருள் நீரைத் தெளிவிக்கும் பொருளுக்கும் _வ ம வம்பனே ......அனையான் - துவந்' னுகிய ன்னுடைய அறிவினுட் லந்தவனே. எக் ாலத்தும் உன் தொண்டில் நின்று மனம் உரு கிக் கதறுகின்ற 'ர் ள் பயனற்றுப் போ மாட்டார் ள் (ல்ல பலனை அடைவார்கள்). அப்படிப்பட்ட அடிய ர்களு டய அருவி யப் போன்று ஆனந்த ' ண்ணீரைச் சொரியும் கல 'கிய தோற்றத் த பு டய அழகிய 'க ரிற் ண்மணி யப் போ ' ற சி பெருமா '. அல்லது அருவி மலங் ல் அம் ண் - அருவியிலிரு 'கும் மலங் ல் மீன் போ ' ற அழகிய ண்.

ஒரு கிருங் ண் ரின் எண் ரில்புன் மாக்கள் உறங்
ருள் நடுநல்யா மத்தே, ரர் கருங்கண்ணின் றிமைக்குஞ்
செழுஞ்சுடர் ளி கங் கலந்தெனக் கலந்துணர் ருவூர்
தரு கரும் பனைய தீந்தமிழ் மாலை தடம்பொழில் மருதயா
ழுதிப்ப ரு ருங் கண்டத் தண்டவா னவர்கோன் மரு
விடம் திருவிடை மருதே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

பூந்துருத்தி நம்பிகாட ம்பி அருளிய

# திருவிசைபபா

---

## க திருவாருர்

பண பஞ்சமம

திருச்சிற்றம்பலம்

கை குவான் முத்தின் சரிவளை பெய்து கழுத்தி
லோர் தனிவட ட்டி முக்கண்ணா ய ராய்ப் பவனிபோந்

---

(௧௦) ஒருங்குஇரும் கண்ணின் - ஒன்று சேர்ந்து தொழிலைச் செய்யும் இரண்டு கண்களையுடைய. மாக்கள் - அறிவில்லாத மக்கள். வரி 2. கருநிறம் பொருந்திய ண்ணைது பிரகாசிக்கும் சுடரொளியோடு கலந்து பொருள்களைப் பார்ப்பதுபோல், இறைவனுடைய அறிவோடு லந்து உணரும் தன் ம பெற்ற ருவூர்த் தேவர். தரும் - செய்த. தடம்பொழில் மருதயாழ் உதிப்ப வரும் - பெரிய சோலையினிடத்து மருதயாழுடன் லந்து பாட , அதனால் வெளிப்பட்டுத் தோன்றும். மருதயாழ் - ஒருவகை யாழ்.

(க) வால்முத்து அல்லது நன்முத்து. நல் - வெண்மையா . வான் - பெருமையுள்ள. சரி வளை - கூட்டமாகிய வளையல் அல்லது முலும் தன் மயு டய வளைய ். இது இடப்பா த்தில் உள்ள உமாதேவியார் அணிந்துள்ளது. பெய்து - அணிந்து. தனி வடம் ஒப்பற்ற மாலை.

திங்ஙன் முரிவதோர் முரிவுமை யளவுந் தக்கசீர்க் ஙகை
யளவுமன் றென்றே தம்மொருப் பாடுல கதன்மேல் மி
சீராரூர் ஆதியாய் வீதி விடங்கராய் நடம்குலா வினரே க

பத்தியாய் உணர்வோர் அருளைவாய் மடுத்துப் பருகுதோ(று) அமுதமொத் தவர்க்கே தித்தியா விருக்குந் தேவர்காள் இவர்தந் திருவுரு இருந்தவா பாரீர் சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த தனிமுழு முதலுமாய் அதற்கோர் வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி விட ்கராய் நடம்குலா வினரே. உ

திருச்சிற்றம்பலம்

( ) இங்ஙன் முரிவதோர் முரிவு உமை அளவும்...ஒருப்பாடு - இவ்வாறு தோன்றுகின்ற அழகிய தோற்றமானது உமாதேவியார் இடத்தும் தக்க சிறப்பினையுடைய கங்காதேவி யிடத்தும் கூ கிடையாது. இப்படி அவர் கோலம் கொள்வதற்கு அவருடைய கருத்து தான் யாதோ? ந ம் குலாவினர் - ந னம் செய்து விளங்குகி றார். ைநடை:- கைக்கு...பவனிபோந்து உலகதன் மேல் மிக்க சீராரூர்...நடங்குலாவினர் இங்ஙன் முரிவதோர்...அளவுமன்று தம் ஒருப்பாடு என்றே?

(உ) வரி 1, 2. சிவபெருமானிடத்து அன்பு பூண்டு அவருடை ய தன்மையை உணர்பவர்கள் திருவருளை நன்றாக உட்கொண்டு ( திருவருளின் வசப்பட்டுத் தம் வசம் இழந்து) உணருந்தோறும் அவர்களுக்கு அத்திருவருள் அமுதம் போன்று பேரின்ப உணர்ச்சியைத் தருகின்றது. தேவர் ளே. இவருடைய திருவுருவம் (அருள் வடிவம்) இருந்த விதம் இத்தன்மையது என்று அறியுங்கள். அதற்கோர் வித்துமாய் உலகங் ள் தோன்றுவதற்கு மூ காரமாகியும். சத்தியாய்ச்......நடங்குலாவினர் பத்தி ாய்......தித்தியாவிருக்கும் தேவர்காள். இவர்தம் திருவுரு இருந்தவா பாரீர். உ ரநடை.

## ௨ கோயில்

**பண் - சாள பாணி**

*திருச்சிற்றம்பலம்*

முத்து வயிரமணி மாணிக்க மாலைகண்மேல்
தொத்து மிளிர்வனபோல் தூண்டு விளக்கேய்ப்ப
எத்திசையும் வானவர்கள் ஏத்தும் எழில்தில்லை
அத்தனுக்கும் அம்பலமே ஆடரங்கம் ஆயிற்றே.

கடியார் கணம்புல்லர் கண்ணப்பர் என்றுன்
அடியார் அமருலகம் ஆளநீ ஆளாதே
முடியாமுத் தீவேள்வி மூவாயி ரவரொடுங்
குடிவாழ்க்கை கொண்டுநீ குலாவிக்கூத் தாடினையே. ௨

அல்லியம் பூம்பழனத்(து) ஆமூர்நா வுக்கரசைச்
செல்ல நெறிவகுத்த சேவகனே தென்தில்லைக்
கொல்லை விடையேறி கூத்தா டரங்காகச்
செல்வம் நிறைந்தசிற் றம்பலமே சேர்ந்தனையே. ௩

---

(௧) தொத்து - பூங்கொத்து. போல் - போலும். தூண்டு விளக்கு ஏய்ப்ப - தூண்டப்பட்ட விளக்கின் ஒளியைப்போன்றும். அம்பலம் - தில்லைவெளி. மிளிர்வனபோல், விளக்கு ஏய்ப்ப என்பனவற்றை அம்பலமே என்னும் சொல்லோடு கூட்டி, பிரகாசிப்பன போன்றும், விளக்கைப் போன்றும் (இருக்கும்) அம்பலம் என்று பொருள் உரைக்க. ஆடு அரங்கம் நடனசபை.

(௨) கடிஆர் - சிறப்பு மிக்க. என்று உன் அடியார் - என்று பெயர்கொண்ட உன் அடியவர்கள். முடியா - அழியாத. குடி வாழ்க்கை கொண்டு - உடனுறையும் வாழ்க்கையினை மேற்கொண்டு. குலாவி - மகிழ்ந்து.

(௩) வரி 1. அகவிதழ்களோடு கூடிய அழகிய பூக்களையுடைய திருவாமூரில் அவதரித்த திருநாவுக்கரசு சுவாமிகளை. செல்ல நெறி வகுத்த - முத்தியை அடையும் பொருட்டு வழியினைக் காட்டிய. கொல்லை விடையேறி - கொல்லையில் மேயும் தன்மையுடைய இடபம் ஏறினவனே. கூத்தாடு அரங்கு - நடனசபை.

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டேமைய ளுமை
சம்பந்தன் காழியர்கோன் தன்னையும்ஆட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந் தானும் அணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே சேர்ந்திருக்கை ஆயிற்றே. ச

கனையா உடலோடு சேரமான் ஆரூரன்
வினையா மதமாறு வெள்ளானை மேல்கொள்ள
முளையா மதிசூடி மூவாயி ரவரோடும்
அளையா விளையாடும் அம்பலம்நின் ஆ' ரங்கே ரு

அகலோக மெல்லாம் அடியவர் ள் தற்சூழப்
புகலோக முண்டென்று புகுமிட(ம்)நீ தேடாதே
புவலோக நெறிபடைத்த புண்ணியங் ள் நண்ணியசீர்ச்
சிவலோகம் ஆவதுவுந் தில்லைச்சிற் றம்பலமே. சு

ள மணி மாடம் சூளிகை சூழ் மாளிகை மேல்
அள மதி நுதலார் ஆயிழையார் போற்றிசைப்ப
ஒளிகொண்ட மாமணிகள் ஓங்கிருளை ஆங்(கு)அகற்றுந்
தெளிகொண்ட தில்லைச்சிற் றம்பலமே சேர்ந்தனையே. எ

(ச) பந்த வல்வினை - (உயிரைக்) கட்டியிருக்கும் கொடியவினை. சம்பந்தன் காழியர்கோன் - சீ ாழித் தலைவரான திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள். அம்பு உந்து கண்ணாள் - செலுத்தப்பட்ட அம்பு போன்ற கண்ணையுடைய உமாதேவியார்.

(ரு) கனையா உடல் - நீங்காத உடல். மதம் ஆறு வினையா - மத நீர் ஆறுபோலப் பெருகி ஓடுகின்ற. முளை ஆம் மதி - முளைபோன்று வளர்ந்த பிறைச்சந்திரன் ; அல்லது, இப்போதுதான் முளைத்ததோ என்று சொல்லும்படியான இளம்பி ற. அளையா - அளைந்து, கலந்து. இச்செய்யுளில் உடலைவிட்டு நீங்காமல் சேரமான் பெருமாள் நாயனாரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கைலாயம் சென்ற வரலாறு குறிக்கப்பட்டுள்ளது. சுந்தரர் சிவபெருமானால் அனுப்பப்பட்ட வெள்ளை யானைமீது ஏறிக்கெ ாண்டு கைலைக்குச் சென்றார்.

(சு) அகலோகம் - பூவுலகம். தற்சூழ - தன்னைச் சூழ்ந்துவர. ரி 2. அடையத்தக் உலகம் வேறு உண்டென்று கருதி அவ்விடத்தைத் தேடிச் செல்லாமல். புவலோ ம் - மேலுலகம் ஏழின் ஒன்று.

(எ) களகம் - சழகம் ; கல்வி பயிலும் இடம். சூளிகை - நிலா முற்றம். அளகம் - கூந்தல். ஆய் இழையார் - விசேஷ ஆபரணங்களை அணிந்த பெண்கள். போற்றிசைப்ப - வணங்க. தெளி - ஒளி.

பாடகமும் நூபுரமும் பல்சிலம்பும் போர்ந்தொலிப்பச்
சூடகக்கை ல்லார் தொழுதேத்தத் தோல்லுலகில்
நாடகத்தின் கூத்தை நவிற்றுமவர் நாடோறும்
ஆட த்தால் மேய்ந்தமைந்த அம்பலங் நின் ஆடர ங்கே. அ

உருவத்(து) எரியுருவாய் ழிதோ றெத்தனையும்
பரவிக் கிடந்தயனும் மாலும் பணிந்தேத்த
இரவிக்கு நேராகி ஏய்ந்திலங்கு மாளிகை சூழ்ந்
தரவிக்கும் அம்பலமே ஆடர ம் ஆயிற்றே.

சேடர் உறைதில்லைச் சிற்றம் பலத்தான்தன்
ஆடல் அதிசயத் த ஆங் கறிந்து பூந்துருத்திக்
ாடன் தமிழ்மாலை பத்துங் கருத்தறிந்து
பாடும் இவைவல்லார் பற்றுநிலை பற்றுவரே க0

திருச்சிற்றம்பலம்

(அ) நூபுரம் - பாதகிண்கிணி. சூட ம் - வளை. தொல் லு கில் ாடகத்தின் கூத் த நவிற்றுமவர் - பழமையான உல மாகிய நாட மேடையில் உயிர் ளை யெல்லாம் கூத்தாடச் செய்பவராகிய சி பெருமான். ' னை ா ம் ஆடுவித்தவா ' திரு ாச ம. (வ னக டரும்) ஆட த்தால் மேய்ந்த மந்த பெ ன்னுல் மூடப் பட்டுள்ள. மேய்தல் - மூடுதல்.

(கூ) உருவத்து எரி உருவாய் தீப்பிழம்பாகிய உரு த்துட ங். ரி 3. சூரியனுக்குச் சமமா ஒளி பொருந்தி விள ங்குகின்ற ாளி ள் சூழ்ந்துள்ள. அரவிக்கும் - ஆரவாரஞ் செய்யும்.

(க0) சேடர் - அடியவர். பற்று(ம்) நிலை பற்றுவர் சி பெரு ானை அ டயும் நிலைமை யப் பெறு ார்.

கண்டராதித்தர் அருளி

# திருவிசைப்பா

---

## கோயில்

பண் - பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

*மின்னாருருவம் மேல்விளங்க வெண்கொடிமா ளிகைசூழப்*
*பொன்னார்குன்றம் ஒன்றுவந்து நின்றதுபோலுமென்னாத்*
*தென்னாவென்று வண்டுபாடுந் தென்தில்லை யம்பலத்துள்*
*என்னாரமுதை யெங்கள்கோவை யென்றுகொ லெய்துவதே*

*ஓவாமுத்தீ அஞ்சுவேள்வி ஆறங்க நான்மறையோர்*
*ஆவேபடுப்பார் அந்தணாளர் ஆகுதி வேட்டுயர்வார்*
*மூவாயிரவர் தங்களோடு முன்னரங் கேறிநின்ற*
*கோவேயுன்றன் கூத்துக்காணக் கூடுவதென்று கொலோ.* ௨

*முத்தீயாளர் நான்மறையர் மூவா யிரவர்நின்னோ*
*டொத்தேவாழுந் தன்மையாளர் ஓதிய நான்மறையைத்*
*தெத்தேயென்று வண்டுபாடுந் தென்தில்லை யம்பலத்துள்*
*அத்தாவுன்றன் ஆடல் காண அணைவது மென்றுகொலோ.* ௩

---

(க) *மின்னார் - மின் ஒளிர். சூழ - சூழ்ந்து இருக்க. என்னா - என்று சொல்லும்படி. தில்லையம்பலம் பொன்னாலாகிய குன்றுக்கு உவமை.*

(௨) *ஓவா - அணையாத. அஞ்சு (ஐந்து) வேள்வியாவன பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம். ஆவே படுப்பார் - பசுத்தன்மையை (மும்மலங்களால் கட்டப்பட்டிருக்கும் தன்மையை) ஒழிப்பார். ஆகுதி வேட்டு உயர்வார் - நெய் விட்டு ஓமாக்கினியை வளர்த்து மேம்பாடு அடைவார்.*

(௩) *நின்னோடு ஒத்தே வாழும் தன்மையாளர் - உன் திருவருள் வழி நின்று வாழும் வாழ்க்கையை மேற்கொள்பவர்.*

மானைப்புரையும் மடமென் னோக்கி மாமலை யாளொடும்
ஆனைஞ்சாடுஞ் சென்னிமேலோர் அம்புலி சூடுமரன்
தேனைப்பாலைத் தில்லைமல்கு செம்பொனின் அம்பலத்துக்
கோனைஞானக் கொழுந்துதன்னைக் கூடுவ தென்றுகொலோ.

களிவானுலகிற் கங்கை நங்கை காதலனே யருளென்
றொளிமான் முன்னே வரங்கிடக்க உன்னடியார்க் கருளுந்
தெளிவா ரமுதே தில்லை மல்கு செம்பொனின் அம்பலத்துள்
ஒளிவான் சுடரே உன்னைநாயேன் உறுவதும் என்றுகொலோ.

பாரோர்முழுதும் வந்திறைஞ்சப் பதஞ்சலிக்(கு) ஆட்டுகந்தான்
வாரார்முலையாள் மங்கைபங்கன் மாமறையோர் வணங்கச்
சீரான்மல்கு தில்லைச்செம்பொன் அம்பலத் தாடுகின்ற
காரார்மிடற்றெங் கண்டனாரைக் காண்பது மென்றுகொலோ.

இலையார்கதிர்வேல் இலங்கைவேந்தன் இருபது தோளும்இற
மலைதானெடுத்த மற்றவற்கு வாளொடு நாள்கொடுத்தான்
சிலையாற்புரமூன் றெய்தவில்லி செம்பொனின் அம்பலத்துக்
கலையார்மறிபொற் கையினானைக் காண்பது மென்றுகொலோ.

---

(ச) புரையும் - ஒத்த. மடம் மென் நோக்கி - இளமையும் மென்மையும் உள்ள பார்வையையுடையவள் (ஆன). ஆன் அஞ்சு - பசுவின் பால் முதலிய பஞ்ச கவ்வியம். அம்புலி சந்திரன். அம்பலம் - நடனசபை.

(ரு) களிவானுலகில் கங்கை - இன்பம் நுகர்தற்குரிய தேவலோகத்தில் இருந்த கங்காநதி. வரி 2. பிரகாசிக்கும் மேனியுடைய திருமால் எதிரில் வரம் பெற விரும்பி வணங்கிக் கிடக்க, அவருக்கு அருள் செய்யாமல் உன் அடியவர்களுக்கு அருள் செய்யும். தெளிவு ஆர் அமுதே - தெளிந்த அரிய அமுதம் போல்பவனே.

(சா) பதஞ்சலிக்கு ஆட்டு உகந்தான் பதஞ்சலி முனிவருக்கு முன்னே மகிழ்ந்து நடனம் புரிந்தவன். கண்டனார் எசமானர் வீரர்; அல்லது கண்டு அ(ன்)னார் - கற்கண்டுபோல் இனியவர்.

(எ) இலை ஆர் கதிர்வேல் - இலை வடிவோடு கூடிய ஒளி பொருந்திய வேலாயுதம். இற - ஒடிய. கலை ஆர் மறி பொற்கையினான் - பெண் கலைமானை ஏந்திய அழகிய கையையுடையவன்.

வெங்கோல்வேந்தன் தென்னன்நாடும் ஈழமும் கொண்டதிறற்
செங்கோற்சோழன் கோழிவேந்தன் செம்பியன் பொன்னணிந்த
அங்கோல்வளையார் பாடியாடும் அணிதில்லை அம்பலத்துள்
எங்கோன்ஈசன் எம்மிறையை என்றுகொல் எய்துவதே. அ

நெடியானோடு நான்முகனும் வானவரும் நெருங்கி
முடியான்முடிகள் மோதிஉக்க முழுமணியின் திரளை
அடியார்அலகி னால்திரட்டும் அணிதில்லை அம்பலத்து
கடியார்கொன்றை மாலையானைக் காண்பதும் என்றுகொலோ. க

சீரான்மல்கு தில்லைச்செம்பொன் அம்பலத் தாடிதன்னைக்
காரார்சோலைக் கோழிவேந்தன் தஞ்சையர் கோன்கலந்த
ஆராஇன்சொற் கண்டராதித்தன் அருந்தமிழ் மாலைவல்லார்
பேராவுலகிற் பெருமையோடும் பேரின்பம் எய்துவரே. கO

திருச்சிற்றம்பலம்

(அ) வெங்கோல் - கொடுங்கோல். ஈழம் - ஈழநாடு. கோழி உறையூர். அம்கோல் வளையார் - அழகிய வளையல் களை அணிந்த மாதர்கள். பொன் அணிந்த (பொன்தகட்டினால் மூடிய) தில்லை அம்பலம் என்று கூட்டுக.

(க) நெடியான் - நீண்ட உருவங்கொண்ட திருமால். முடியான் முடிகள் கிரீடங்களோடு கிரீடங்கள். உக்க சிந்தின. அலகு - துடைப்பம். கடிஆர் மணம் நிறைந்த.

(கO) கார்ஆர் சோலை மேகங்கள் தவழும்படி உயர்ந்த சோலை அல்லது (மரங்கள் அடர்ந்திருப்பதால்) இருள் மிகுந்த சோலை. கோழிவேந்தன் தஞ்சையர்கோன் (ஆகிய) கண்டராதித்தன் கலந்த ஆரா இன்சொல் அருந்தமிழ் மாலை உறையூர் அரசனும் தஞ்சை மன்னனுமான கண்டராதித்தன் திருவருளோடு கலந்து பாடின தெவிட்டாத இனிய சொற்களோடு கூடிய அரிய தமிழ்ப்பாமாலை. பேரா உலகு - விட்டு நீங்குதல் இல்லாத முத்தி உலகம்.

வேணாட்டடிகள் அருளிய

# திருவி சபபா



## கோயில்

பஎ - புறநீ

*திருச்சிற்றம்பலம்*

துச்சான செய்திடினும் பொறுப்பரன்றே ஆளுகப்பார்
கைச்சாலுஞ் சிறு கதலி இலைவேம்புங் கறிகொள்வார்
எச்சார்வு மில்லாமை நீயறிந்தும் எனதுபணி
நச்சாய்காண் திருத்தில்லை யம்பலத்தெம் நம்பானே க

தம்பானை சாய்ப்பற்றார் என்னும் முதுசொல்லும்
எம்போல்வார்க் கில்லாமை யென்னளவே யறிந்தொழிந்தேன்
வம்பானார் பணியுகந்தி வழியடியேன் தொழிலிறையும்
நம்பாய் காண் திருத்தில்லை யம்பலத்தெம் நம்பானே உ

(க) துச்சான - இழிவான தொழில்கள். ஆள் உகப்பார் - அடிமையை விரும்புபவர். கைச்சாலும் கைத்தாலும் கசந்தாலும். சிறு கதலி - இரவா ழக்காய். இலைவேம்பு - வேப்பிலை. கறிகொள்வார் கறிசெய்வதற்கு உபயோகிப்பார்கள். எச்சார்வு எவ்வித ஆதரவு. பணி - தொண்டு. நச்சாய் விரும்பாய். நம்பானே கடவுளே.

(உ) வரி 1 2. யாரும் தம்முடைய பானையை சாய்த்துப் பிடிக்கமாட்டார்கள் என்கிற பழமொழியும் எம்மைப்போன்றவர்க்குப் பொருந்தாமை என்னிடத்தே கண்டுகொண்டேன். முதுசொல் - பழமொழி. வம்பு ஆனார் புதியராய் வந்தவர். பணி உகந்தி - அடிமைத் தொண்டினை விரும்புகிறாய். வழி அடியேன் - பரம்பரை அடியவன். தொழில் இறையும் நம்பாய் - தொண்டினைச் சிறிதும் விரும்பமாட்டாய். எவரும் தம்முடைய பானையைச் சாய்க்காமல் பிடித்து நீர் நிரப்பிக்கொள்வதுபோல, உன் அடியவனை தொண்டினை ஏற்று என்னை உன் அருளினால் நிரப்பவேண்டும் என்பது இப்பாட்டின் கருத்து.

பொசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளமென் றதுபோலத்
திசைநோக்கிப் பேழ்கணித்துச் சிவபெருமா னேஎனினும்
இசையானால் என்திறத்தும் எனையுடையாள் உரையாடாள்
நசையானேன் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. ௩

ஆயாத சமயங்கள் அவரவர்கள் முன்பென்னை
நோயோடு பிணிநலிய இருக்கின்ற அதனாலே
பேயாவித் தொழும்பனைத்தம் பிரான்இகழு மென்பித்தாய்
நாயேனைத் திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே. ௪

நின்றுநினை திருந்துகிடந் தெழுந்துதொழும் தொழும்பனேன்
ஒன்றியொரு கால்நினையா திருந்தாலும் இருக்கவொட்டாய்
ன்றுபிரி கற்றுப்போல் கதறுவித்தி வர புநில்லாய்
ன்றிதுவோ திருத்தில்லை ; டம்பயிலும் நம்பானே. ௫

(௩) வரி 1. நிறைந்த குளத்தினருகிலிருக்கும் பள்ள யலி லுள்ள பயிர் முளைக்குக் குளத்தின் நீர் கசிந்து பாயாதோ என்னும் பழமொழி எனக்குப் பொருந்தவில்லை ; ஏனெனில் சிவபெருமானைச் சரண அடைந்த நான் அவரை அணுகி முறையிட்டாலும் அருள் புரியாமல் இரு கின்றார். நிறை குளம் - கருணை நிறைந்த சிவ பெருமானுக்கு உவமை. பேழ்கணித்து - மருண்டு விழித்து. சிவ பெருமான் ஏ எனினும் - சிவபெருமானே . ஓவென்று கதறினாலும். இசையான் - (என் வேண்டுகோளுக்கு) இணங்கமாட்டான். ஆல் - அசை. எனை உடையாள் - என்னை ஆளாக உடைய உமாதேவியார். உரையாடாள் பேசாதிருக்கின்றாள். நசை ஆனேன் ஆ சப் பட்டேன்.

(௪) ஆயாத - ஆராய்ச்சி இல்லாத. சமயங்கள் அவரவர் ள் - சம யத் த அனுட்டிப்போர். வரி 2 3. என்னைப் பல நோய்கள் வருத்து கின்ற காரணத்தினால், "இத்தொண்டனைப் பேய் என்று கருதித் தம்பிரானே இ ழ்கின்றான் (அருளாதிருக்கின்றான்)" என்று அவர் சொல்லிப் பரிகசிக்கும்படி நாய்போன்ற என்னைச் செய்தாய்.

(௫) வரி 1. நிற்கும்போதும், இருக்கும்போதும், கிடக்கும் போதும், எழும்போதும் உன்னை நினைந்து வ ங்கும்படியான உன் அடியவனான நான். வரி 2. ஒரு சமயம் உன்னை ஒன்றி ( ம் புலன்களும் ஒற்று மைப்பட்டு) நினையாமல் இருந்தாலும், எ னை அப்படி இருக் விடமாட்டாய் (எக் ாலத்தும் உ னை நினை கும்படி செய் ாய்.) ற்று - ன் றயுடைய பசு ரவு நி லாய் - வந்து திரில் நிற்கமாட்டாய்.

படுமதமு மிடவயிறும் உ டய ளி றுடையபிரான்
அடியறிய உ ர்த்துவதும் அ த்தியனுக் கே ரத்தன்றே
இடுவதுபுல் லோரேருதுக் கோன்றினுக்கு வையிடுதல்
டுவிதுவோ திருத்தில்லை டம்பயிலும் நம்பானே சு

ம ' ணோடு விண்ணளவும் மனிதரொடு வானவர்க்குங்
க ' ணாவாய் கண்ணுகா தொழிதலும்நான் மிகக் ல' கி
அண்ணுவோ என்றண்ணுந் தலமந்து விளித்தாலும்
நண்ணுயால் திருத்தில்லை நடம்பயிலும் ம்பானே. எ

வாடா வாய் ாப்பிதற்றி உனைநினைந்து நெஞ்சுருகி
வீடாஞ்செய் குற்றேவல் எற்றேமற் றிதுபொய்யிற்
கூ ாமே கைவந்து குறுகுமா றியான்உன்னை
ாடாயால் திருத்தில்லை நடம்பயிலும் ம்பானே அ

வாளாமால் அயன்வீழ்ந்து காண்பரிய மாண்பிதனைத்
தோளாரக் கையாரத் துணையாரத் தொழுதாலும்
ஆளோநீ யுடையதுவும் அடியேனுன் தாள்சேரும்
ாளேதோ திருத்தில்லை டம்பயிலும் நம்பானே.

---

(சு) படுமதமும் மி யிறும் - ஒழுகுகின்ற மதநீரும் மிட (பானை) போன்ற வயிற் றயும். இட யிறு எனப் பிரித்து பெரிய யிறு எனவும் பொருள்கொ ாள்ளலாம். களிறு - விநாயகர். அடி - திருவடியின் தன்மை. ஒத்து - வே தம். வை - 'போ ால். நடு இதுவோ - இது நடுநிலை ம ஆகுமோ?

(எ) ண் - ஆதரவு. அலமந்து துன்புற்று. நண்ணுய் - சமீபிக் மாட்டாய்.

(அ) வாடா ாய் நாப் பிதற்றி - வாய் வாட்டமடைந்து ாவினுல் உளறி. வரி 2. வீடு ஆம் செய்குற்றே ல் மற்று எற்றே முத்தியத் தரும்படியான குற்றே ல் இ தத் தவிர வே று யாது உளது? கை வந்து - கை ெ டுத்து உதவி. யா ' உன்னைக் குறுகுமாறு. ாடாய் - விரும்பாய் அரு மாட்டாய ?

( ) துணை ஆர ஆதர ா. ஆளோ நீ உ டயது ம் நீ 'னை அடியானு உ டயதுவும் உ 'மைதானோ?

பா ர் ்த தமிழ்மாலை பத்தாடி, ் தொ ் டரெ டுத்
தோவாதே அழை ் கின்றான் என்றருளின் ன் றுமிகத்
தேவேதென் திருத்தில்லைக் கூத்தாட ாயடி ேயன்
சா ாயும் நினைக் ா ் டல் இனியுன ் குத் தடுப்பரிதே க0

திருச்சிற்றம்பலம்



திருவாலியமுதனார் அருளிய

# திருவி சபபா



## க கோயில் - பாதாதிே ம்

பண - பஞ மம

திருச்சிற்றம்பலம்

மையன் மாதொரு கூறன் மால்விடை யேறி மான்
மறி யே ் திய தடங் கையன்கார் புரையுங் கறை ் க ் டன்
னல் மழுவான் ஐயன் ஆரழ லாடு வான்அணி நீர்வயல்
தில்லை யம்பலத்தான் செய்ய பாதம் வந்தென் சிந்தையுள்ளி
ட ் கொ ் டவே க

( 0) ஓவாதே ஓயாமல். அருளின் மிக நன்று. வரி 4. ா ்
சாரும் ாலத்திலும் நீ காட்சி கொடுக்காமல் தடைசெய்ய முடியாது.
' ப னெனும் ாமம் பிடித்துத் திரிந்து ப ் ளுள் அ ழைத்தால்
இவனெனைப் பன்னுள் அ ழைப்பொழியா னென்றெதிர்ப்படுமே''
அபப (சி னெனு).

( ) மயல் ம தொரு கூற ் - மிக் காதல் ெ ா ் ட உமா
தேவியா ரப் பா த்தில் வைத்த ன். மால்விடை யேறி - திருமாலா
கிய இடபத்தின்மீது ஊர்பவன். ார் பு ரயும் ற ் கண்ட ் -
மே ம் போன்று கறுத்த விஷம் பொரு ் திய ண்டத் தயு டைய
். செய்ய - சி ந்த.

சலம்பொற் றாமரை தாழ்ந் தெழுந்த தடமும் தடம்பு ல் ாய் மலர், பூஇ அ ம்பி ண்ட ற யும்அணி யார் தில்லை அம்பலவன் புலம்பி வானவர் தானவர் பு ழ்ந் தேத்த ஆடுபொற் கூத்தனார்கழற் சிலம்பு கி கிணியென் சிந்தை யுள்ளிட ொண்டனவே. உ

குருண்ட வார்குழற் ோதை மார்குயில் போன்மி ழற் றிய ோலமாளிகை திர ண்ட தில்லைத ுள்திரு மல்கு சிற் றம்பலவன் மருண்டு மாமலை யான்மகள் தொழ ஆடு கூ த மணிபுரைதரு திர ண் ான்குற ென் சிந்தை யு ளிட ொண்டன ே. ௩

போழ்ந்து யானை தன்னைப் பொருப்பன் மகளுமை யச்ச ண்டவன் தாழ்ந்த த புனல் சூழ், டம் மல்குசிற் றம்பலவன் சூழ்ந்த பாய்புலித் தோல்மி சைத் தொடுத்து வீ்கும் பொ ூல் தன் ிமொடு தாழ் த ச்சதன்ே ற தமியேனைத் தளர்வித்ததே.

பந்த பாசமெலாம் அறப்பசு பாசம் நீ கிட பன்முனிவரோ டந்தணர் வண ்கும் அணியார் தில்லை அம்பலவன்

(உ) வரி 1. நீர் தாழ்ந்திருப்ப அதில் பொற்றாமரை மேலெழுந்து நிற்கும் குளமும், குளத்து நீரினிடத்துள்ள தாம ர மலரை அணைந்து. அலம்பி வ டு அறையும் ாங ாரம் செய்துொ ண்டு வண்டுகள் பூவினிடத்து மோதுகின்ற. புலம்பி (அன்பினால்) ஆ ந்த ணீர் சொரிந்து. சிலம்பு கிண்கிணி - ஒலிக்கும் சதங் .

(௩) குரு ட - சுருண்ட. மிழற்றிய ொஞ்சிப் பேசுகின்ற. மணி பு ரதரு மாணி கத்தை யொத்த. வான் குறங்கு - பெரு ம யு டய தொ ட.

(ச) போழ்ந்து - பிளந்து. பொருப்பன் ம ள் - மலைய ரயன் ம ள் உமாதேவியார். வீக்கும் - கட்டிய. பெ ன் நூல் - அழகிய கயிறு. ச்சு இ ட கட்டு.

(ரு) வரி 1. ஆன்மாக் ளை கட்டியுள்ள ட்டு ர் (மும்மல ள்) அறுபட்டு ஒழியும்படி பசுபாசத் த (தற்போத உ ர்ச்சி ய) நீ கிய பல முனிவர் ளோடு.

செந்தழல் புரைமேனியுந் திகழுந் திரு மிறும் வ பிற்றினுள்
உந்திவான் சுழியென் னுள்ளத் துள்ளிடங் கொண்ட வே.

குதிரை மாவொடு தேர்பல குவிந்தீண்டு தில்லையுள்
கொம்பனாரொடு மதுர வாய்மொழி யார்மகிழ்ந் தேத்து
சிற் றம்பலவன் அதிர வார்கழல் வீசிநின் றழகா நடம்
பயில் கூத்தன் மேல்திகழ் உதர பந்தனமென் னுள்ளத்
துள்ளிடங் கொண்டனவே. சு

படங்கொள் பாம்பணை யானொடு பிரமன் பரம்பரமா
அருளென்று தடங்கை யால்தொழ வுந்தழ லாடுசிற் றம்
பலவன் தடங்கை நான்குமத் தோள்களுந் தடமார்பினிற்
பூண்கள் மேற்றிசை விடங்கொள் கண்டம ேற விணை
யேனை மெலிவித் தே. எ

செய்ய ே ாடுடன் கமல மலர்சூழ்தரு தில்லை மாமறை
யோர்கள் தாம்தொழ வையம் உய்ய நின்றுமகிழ்ந் தாடுசிற்
றம்பலவன் செய்ய வாயின் முறு ுவும் திகழும் திரு
காதும் காதினின் மாத்திரைகளோ ைய தோடுமன்
றேயடி யேனையாட் கொண்டனவே. அ

---

(ரு) உந்தி வான்சுழி - வான் உந்திச் சுழி, பெருமை பொருந்
திய கொப்பூழ்.

(சு) மா - யானை. குவிந்து ஈண்டு - சேர்ந்து நெருங்குகின்ற.
கொம்பு அன்னார் - பூங்கொம்பு ஒத்த மகளிர். மதுரவாய் மொழி
யார் - இனிய இசைப் பாடல்களைப் பாடுகின்ற அடியார். அதிர
வார்கழல் வீசி ஒலிக்கும்படியாக வீரக்கழல்களை அணிந்த நீண்ட
பாதங்களை வீசி. உதர பந்தனம் - அரைப் பட்டிகை.

(எ) மேற்று இசை - மேற்பக்கத்தில் பொருந்திய. வினையேனை -
தீவினையையுடைய என்னை.

(அ) செய்ய ே டுடன் மலமலர் சிவந்த வரிகளுடன் கூடிய
தாமரை மலர். மாத்திரை - ஒருவகைக் காதணி. ஐய தோடு - அழ
கிய பெண் காதணி.

செற்று வன்புர ' தீயெழச்சிலே கோலி ஆரழல் ஊட்டினனவன்
எற்றி மாமணிக ளெறிநீர் தி 'லே யம்பலவன்
மற்றை நாட்ட மிரண்டொடு மலருந் திருமுகமும் முகத்தினுள்
செ ற்றி நாட்டமன்றே நெஞ்சு ளே திளேக் கின்றனவே கூ

தொறுக்கள் வா 'கமல மலருழக்கக் கரும்புநற் சாறு பாய்தர மறுக்கமாய்' யல்கள் மடை பாய்தி 'லே அம்பலவன் மு றுக்கு வாசிகை தன்னொடு முகிழ்த்தஅவ் வகத்தி மொட் டொடுமத்தமும் பிறைக்கொள் சென்னியன்றே பிரியா தென்னுள் நின்றனவே. கO

தூவி ரோடு பூவ வைதொழு தேத்து கையின ராகி மிக்கதோர் ஆவி உள்நிறுத்தி யமர்ந்தூறிய அன்பின ராய்த் தேவர்தாந் தொழ ஆடிய தில்லேக் கூத்தனேத் திரு வாலி சொல்லிவை மேவ வல்லவர்கள் வினை யானடி மேவு வரே. க

திருச்சிற்றம்பலம்

---

(கூ) செற்று - அழிக்கும் பொருட்டு. சிலேகோலி - வில்லே அல்லது மலே ய ளேத்து. ஆர்அழல் ஊட்டினன், அவன் - அரிய தீயை உண்ணும்படிச் செய்தவ '. எற்றி எறி வாரி எறிகின்ற. திளே ' கி ' ற பதிந்திரு 'கின்ற .

( O) தொறுக் ள் - ப 'கூட்டங்கள், உழ ' - மிதிக் . மறு 'க மாய் - மனக்குழப்பத்தொடு. முறு 'கு வாசிகை முறுக் ப்பட்ட பூ மாலே.

(க ) நீரொடு பூ அவை தூவி - நீரினல் அபிடேக' செய்து லர் ளினல் அர்ச்சித்து. ஆவி உள் நிறுத்தி சுவாசத் த உ 'ளே நிறுத்தி. அமர்ந்து - விரும்பி. றிய உருகிய மனத்தொடு. தே - துதி ' . மே வுவர் - அடைவார் ள்.

# ௨ கோயில் - பவளமால்வரை

பண — டடாம

திருச்சிற்றம்பலம்

பவளமால் வரையைப் பனிபடர்ந் தனையதோர் படரொளி தருதிரு நீறுங் குவளைமாமலர்க் கண்ணியுங் கொன்றையுந் துன்றுபொற் குழல்திருச் சடையும் திகழ் மாளிகை சூழ்தரு தில்லையுள் திருநடம் புரிகின்ற தவள வண்ணனை நினைதொறும் என்மனம் தழல்மெழு கொக்கின்றதே.

ஒக்க வோட்டந்த வந்தியும் மதியமும் அலைகடல் ஒலியோடு நெக்கு வீழ்தரு நெஞ்சினைப் பாய்தலும் நிறையழிந் திருப்பேனைச் செக்கர் மாளிகை சூழ்தரு தில்லையுள் திருநடம் வகையாலே பக்க மோட்டந்த மன்மதன் மலர்க்கணை படுந்தொறும் அலந்தேனே ௨

அலந்து போயினேன் அம்பலக் கூத்தனே அணிதில்லை நகராளீ சிலந்தியை அரசாள் கென் றருள்செய்த தேவதேவ, வீசு நீனை ...லந்தமார்க் கண்டிக் காகிஅக் காலனை உயிர்செக வுதைகொண்ட மலர்ந்த பாதங்கள் வளமுலை மேலொற்ற வந்தருள் செய்யாயே. ௩

---

இப்பதிகம் சிவபெருமானைக் காதலித்த ஒரு பெண்ணின் மொழிகளாக அமைந்துள்ளது. இது அந்தாதித்தொடை.

(௧) துன்று பொற்குழல் திருச்சடையும் நெருங்கிய பொன் னிறமுள்ள சுருட்டி முடிக்கப்பட்ட திருச்சடையும். திவள - வேலைப் பாடுகள் அமைந்த. தவள வண்ணனை - (வெண்ணீறு அணிந்தமை யால்) வெண்ணிறம் பொருந்தியவனை.

(௨) ஒக்க ஓட்டந்த - ஒருசேர ஓடின. அந்தி - மாலைக் காலம். நிறை - கற்பின் வரம்பு. திருநடம்...அலந்தேனே-திருநடனம் செய் கின்ற விதத்தினால் பக்கத்தில் ஓடி வந்த மன்மதன் செலுத்திய பூ அம்புகள் என்மீது படுந்தோறும் துன்பமடைந்தேன். திருநடனம் தரிசித்தமையால் உண்டான காதல் மிகுதியை இச்செய்யுள் தெரி விக்கின்றது.

(௩) அலந்து துன்பமடைந்து. உலந்த - துன்பமுற்ற. வரி 3 துன்புற்ற மார்க்கண்டனுக்காக அந்த யமனை உயிர் நீங்கும்படி உதைத்தருளிய.

அருள்செய் தாடு ' லம்பலக் கூத்தனே அணிதில்லை கராளீ மருள்செய் தென்றனை வனமுலை பொன்பயப் பிப் டது வழக் ாமோ திராளும் நீள்ம ரி ' ங் யைத் திருச் சடைச் சேர்த்தியச் செய்யாளு ' குருவம் பா மும் ஈந்து ல் லந்தி ய யொண்ணுதல் வைத்தோனே.

ை த்த பாத ' கள் மால ன் கா ' கிலன் மலரவ ர் முடிதேடி எய்த்து ந்திழிந் தின்னமும் துதிக்கின்றார் எழில்மறை யவற்றுலே செய்த்தலை ' கமலம் மலர்ந்தோங்கிய தில்லையம் பலத்தானைப் பத்தியாற் சென்று ண்டிட என்மனம் பதைபதைப் பொழியாதே. ரு

தேய்ந்து மெய்வெளுத் தகம்வளைந் தரவினை யஞ்சித்தா னிருந்தேயுங் காய்ந்து வந்துவந் தெனறனை வலிசெய்து கதிர் நிலா எரிதூவும் ஆய்ந்த ான்மறை அந்த ர் தில்லையுள் அம்பலத் தரனுடல் வாய்ந்த மாமலர்ப் பாத ' கள் ாண்ப தோர் மனத்தினை யுடையேற்கே. சு

உடையும் பாய்புலித் தோலுநல் அரவமும உண்பதும் பலிதேர்ந்து விடைய தூர்வது மேவிடங் கோடுவரை யாகிலு மென்நெஞ்சம் மடைெ ாள் ானை ள் குதிெ ாளும் வயல்

(ச) அருள் செய்து ஆடும் - ஆடு தலால் உயிர்களுக்கு அருளைச் செய்கின்ற. வரி ?. என்னை மயக்கி அழகிய முலைகள்மேல் பொன் னிறங்கொண்ட தேமலை உண்டுபண்ணுவது நீதியோ? நல் அம் தியை நல்ல அழகிய தீ ய. தீயை என்பது குறுகித் தி ய என்று ஆயிற்று.

(ரு) செய்த்தலை - வயல் ளினிடத்து. மாலும் அயனும் தேடி ' ா முடியாத பெருமானைப் பத்தி செய்தால் ாணக்கூடும் என்னும் குறிப்பு காண்க.

(சு) வரி 1, 2. திர்நிலா தேய்ந்து மெய் வெளுத்து அ ம் (உடல்) ளைந்து அரவினை அஞ்சி இருந்தும் ாய்ந்து (ே ாபித்து) வந்து என்தனை வலிசெய்து (துன்புறுத்தி) நெருப் ப சும்.

(எ) ரி 1. சிவபெருமான் அணியும் ஆ டய து புலித் தோலும் பாம்புமே. அவருக்கு உணவா து பிச் சச்சோறே. மேவு இடம் ெ ாடு வ ர - வசிக்கும் இடம் ெ ாடு ம மி ' மலை.

தில்லை யம்பலத் தனலாடும் உடையகோ வினை யன்றிமற் றாரையும் உள்ளுவ தறியேனே. எ

அறிவும் மிக்கநல் நாணமும் நிறைமையும் ஆசையும் இங்குள்ள உறவும் பெற்றநற் றயொடு தந்தையும் உடன் பிறந் தவரோடும் பிரிய விட்டெனை யடைந்தனன் என்று கோள் பெரும்பற்றப் புலியூரின் மறைகள் நான்குங்கொண் ந்தணர் ஏத்த ன் மாநடம் மகிழ்வானே. அ

வான நாடுடை மைந்தனே யோஎன்பன் வந்தருளாய் என்பன், பால்நெய் ஐந்துடன் ஆடிய படர்சடைப் பால் வண்ணனேஎன்பன் தேனமர் பொழில் சூழ்தரு தில்லை யுள் திருநடம் புரிகின்ற ஏன மாமணிப் பூணணி மார்பனே எனக்கருள் புரியாயே. ௯

புரியும் பொன்மதில் சூழ்தரு தில்லையுள் பூசுரர் பலர் போற்ற எரிய தாடும்எம் ஈசனைக் காதலித் திணையவ மொழியாக வரைசெய் மாமதில் மயிலையர் மன்னவன் மறைவல திருவாலி பரவல் பத்திவை வல்லவர் பரமன தடியிணை பணிவாரே. ௧௦

திருச்சிற்றம்பலம்

(எ) உடையகோ - என்னை அடிமையா _ டய அரசன். ள்ளுவது - நினைப்பது.

(அ) அறிவும் - தற்போதமும். என்றுகொள் என்னை (நாயகியாக) ஏற்றுக்கொள்வாயாக.

(௯) வான நாடு - சிவபுரம். ஏன மாமணிப் பூண் - பன்றிக் கொம்பாகிய பெரிய அழகிய ஆபரணம்.

(௧௦) புரியும் - விரும்புகின்ற. இணையவள் மொழியாக - வருந்தினவள் கூறிய மொழிகளா . வரைசெய் மா மதில் - மலைகளைப் போன்று உயர்ந்து பருத்த மதில்.

# ௯ கோயில்

## பண் - இந்தளம்

*திருச்சிற்றம்பலம்*

அல்லாய்ப் பகலாய் அருவாய் உருவாய் ஆரா அமுதமாய்க்
கல்லால் நிழலாய் கயிலை மலையாய் காண அருளென்று
பல்லா யிரம்பேர் பதஞ்சலிகள் பரவ வெளிப்பட்டுச்
செல்வாய் மதில் தில்லைக் குளிர்த் தேவன் ஆடுமே. ௧

அன்ன நடையார் அமுதமொழியார் அவர்கள் பயில்தில்லைத்
தென்நன் தமிழும் இசையும் கலந்த சிற்றம் பலந்தன்னுள்
பொன்னும் மணியும் நிரந்த தலத்துப் புலித்தோல் பியற்கிட்டு
மின்னின் இடையாள் உமையாள் காண விகிர்தன் ஆடுமே. ௨

இளமென் முலையார் எழில்மைந் தரொடும் ஏரார் அமளிமேல்
திளையும் மாடத் திருவார் தில்லைச் சிற்றம் பலந்தன்னுள்
வளர்பொன் மலையுள் வயிர மலைபோல் வலக்கை கவித்துநின்
றளவில் பெருமை அமரர் போற்ற அழகன் ஆடுமே. ௩

சந்தும் அகிலுந் தழைப்பீலிகளுஞ் சாதி பலவுங்கொண்
டுந்தி இழியும் நிவவின் கரைமேல் உயர்ந்த மதிற்றில்லைச்
சிந்திப் பரிய தெய்வப் பதியுள் சிற்றம் பலந்தன்னுள்
நந்தி முழவங் கொட்ட நட்டம் நாதன் ஆடுமே. ௪

---

(௧) அல்லாய் - இரவாயிருப்பவனே. அருவாய் - அருவானவனே. ஆரா அமுதாய் - தெவிட்டாத அமுதம் போன்றவனே. காண அருளென்று பரவ - யாம் காணும்படி அருள் செய்வாய் என்று துதிக்க. செல்வாய் - மேகங்கள் தவழுகின்ற. செல் - மேகம்.

(௨) பயில் தில்லை - வாழும் தில்லையுள். தென் நன் தமிழும் - அழகிய நல்ல தமிழும். நிரந்த - நிறைந்துள்ள. பியற்கு இட்டு - பிடரின்மேல் தரித்து. மின்னின் இடையாள் உமையாள் - மின்னற் கொடி போன்ற மெல்லிய இடையையுடைய உமாதேவியார். விகிர்தன் - பல வடிவம் கொள்பவன்.

(௩) ஏர் ஆர் அமளி - அழகு மிக்க படுக்கை. திளையும் - இன்பம் நுகரும். கவித்து - வளைத்து.

(௪) சந்தும் - சந்தன மரமும். தழைப்பீலி - மயில் தோகை. சாதி பலவும் கொண்டு உந்தி - சாதிக்காய் மரம் பலாமரம் ஆகிய இவற்றைத் தள்ளிக்கொண்டு.

ஓமப் புகையும் அகிலின் புகையும் உயர்ந்து முகில்தோயத்
தீமெய்த் தொழிலார் மறையோர் மல்குசிற்றம்பலந்தன்னுள்
வாமத் தெழிலா ரெடுத்த பாதம் மழலைச் சிலம்பார்க்கத்
தீமெய்ச் சடைமேல் திங்கள் சூடித் தேவன் ஆடுமே. ரு

குரவம் கோங்கம் குளிர்புன்னை கைதை குவிந்த கரைகள்மேல்
திரைவந் துலவுந் தில்லை மல்கு சிற்றம் பலந்தன்னுள்
வரைபோல் மலிந்த மணிமண் டபத்து மறையோர் மகிழ்ந்தேத்த
அரவம் ஆட அனல்கை யேந்தி அழகன் ஆடுமே. சு

சித்தர் தேவர் இயக்கர் முனிவர் தேனார் பொழில்தில்லை
அத்தா அருளாய் அணியம் பலவா என்றென் றவரேத்த
முத்தும் மணியும் நிரந்த தலத்துள் முளைவெண் மதிசூடிக்
கொத்தார் சடைகள் தாழ நட்டம் குழகன் ஆடுமே. எ

அதித்த அரக்கன் நெரிய விரலால்அடர்த்தாய் அருளென்று
துதித்து மறையோர் வணங்குந் தில்லைச்சிற்றம் பலந்தன்னுள்
உதிக்கின்ற போழ்தில் இரவிக் கதிர்போல் ஒளிர்மா மணிஎங்கும்
பதித்த தலத்துப் பவளமேனிப் பரமன் ஆடுமே. அ

---

(ரு) முகில் தோய - மேகங்களின் மீது படிய. தீமெய்த் தொழிலார் - ஓமாக்கினியை வளர்க்கும் உண்மைத்தொழில் செய்வோர். வாமத்தெழில்ஆர் எடுத்த பாதம் இடப்பக்கத்தில் (அநுக்கிரமாகிய தொழிலைச் செய்யும்) அழகு மிகுந்த தூக்கிய பாதம். தீமெய்ச் சடைமேல் - நெருப்பைப் போன்று செந்நிறம் பொருந்திய சடைமேல்.

(சு) கைதை - தாழை. குவிந்த - குவிந்து கிடக்கும். வரி 3. மலைகள் போன்று உயர்ந்தும் மிகுதியுமான அழகிய மண்டபங்களில்.

(எ) நிரந்த - நிறைந்துள்ள. கொத்து ஆர் பூங்கொத்துகள் நிறைந்த.

(அ) அதித்த - ஆரவாரித்த. வரி 3. உதய காலத்தில் தோன்றும் சூரியன்போல் சிறந்த ஒளியையுடைய வீரம் பெரிய மணிகள் பதிக்கப்பெற்றுள்ள தில்லைத் தலத்தில்.

மாலோ டயனும் அமரர் பதியும் வந்து வணங்கிநின்(று)
ஆலங் கண்டா அரனே அருளாய் என்றென் றவரேத்தச்
சேலோ டும்வயல் தில்லை மல்கு சிற்றம் பலந்தன்னுள்
பாலா டுமுடிச் சடைகள் தாழப் பரமன் ஆடுமே. ௯

நெடிய சமணு மறைசாக் கியரும் நிரம்பாப் பல்நோ ராடிச்
செடியுந் தவத்தோர் அடையாத் தில்லைச் சிற்றம் பலத்தெங்கள்
அடிக ளவரை ஆரூர் நம்பி யவர்கள் இசைபாடக்
கொடியும் விடையும் உடைய கோலம் குழகன் ஆடுமே ௦

வானோர் பணிய மண்ணோ ரேத்த மன்னி நடமாடும்
தேனார் பொழில்சூழ் தில்லை மல்கு சிற்றம் பலத்தானைத்
தூயான் மறையான் அமுதவாலி சொன்ன தமிழ்மாலைப்
பானேர் பாடல் பத்தும் பாடப் பாவநாசமே.

திருச்சிற்றம்பலம்

(௯) பால் ஆடும் முடி பாலினால் அபிஷேகஞ் செய்யப்பட்ட திருமுடியிலுள்ள.

(௦) நெடிய சமணும் அறசாக்கியரும் நீண்ட சமணரும் பேச்சில் வல்ல புத்தரும். நிரம்பா நிரம்பாத (குறைந்த) அறிவினை யுடைய. செடியும் தவத்தோர் குற்றம் பொருந்திய தவத்தைச் செய்பவர், குற்றமாகிய (உடம்பினுக்குத் துன்பம் விளைவித்தல் முதலிய) செயல்களைத் தவச்செயல்களாகக் கருதுபவர். "செடித் தவம் செய்வார் சென்றுழிச் செல்லேல்" என்ப. அடிகள் - சுவாமிகள். ஆரூர்நம்பி - நம்பிஆரூரர் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

(கக) பால்நேர் பாலை ஒத்து இனிய.

# ௪ கோயில்*

பண் பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

கோலமலர் நெடுங்கண் கொவ்வை வாய்க்கொடி யேரிடையீர்
பாலினை இன்னமுதைப் பரமாய பரஞ்சுடரைச்
சேலுகளும் வயல்சூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்
தேலவுடை எம்மிறையை என்றுகொல் காண்பதுவே.

காண்பது யான்என்றுகொல் கதிர்மாமணி யைக்கனலை
ஆண்பெண் அருவுருவென் றறிதற்கரி தாயவனைச்
சேண்பணை மாளிகை சூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பல
மாண்புடை மாநடஞ்செய் மறையோன்மலர்ப் பாதங்களே. ௨

கள்ளவிழ் தாமரைமேல் கண்டயனொடு மால்பணிய
ஒள்ளெரி யின்னடுவே யுருவாய்ப்பரந் தோங்கியசீர்த்
தெள்ளிய தண்பொழில்சூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்
துள்ளெரி யாடுகின்ற ஒருவனை உணர்வரிதே. ௩

அரிவையோர் கூறுகந்தான் அழகன்எழில் மால்கரியின்
உரிவைநல் உத்தரியம் உகந்தான் உம்பரார் தம்பிரான்
புரிபவர்க் கின்னருள்செய் புலியூர்த்திருச் சிற்றம்பலத்
தெரிமகிழ்ந் தாடுகின்ற எம்பிரான்என் இறையவனே. ௪

---

இப்பதிகம் அந்தாதித்தொடை.

(௧) கொடிஏர் பூங்கொடிபோலும் அழகிய. ஏலவுடை - ஏலுதலையுடைய எழுந்தருளியுள்ள.

(௨) கதிர் மாமணி - ஒளி வீசும் பெரிய மாணிக்கம் போன்றவன். சேண் பணை உயர்ந்து பருத்த. மாண்பு பெருமை

(௩) கள்அவிழ் தேன் ஒழுகும். அயனொடு மால் கண்டு பணிய என்று கூட்டுக.

(௪) மால் கரி பெரிய அல்லது மயக்கமுடைய யானை. புரிபவர்க்கு தன்னை விரும்புகிறவர்களுக்கு.

இறைவனை என்கதியை என்னுளேஉயிர்ப் பாகிநின்ற
மறைவனை மண்ணும்விண்ணும் மலிவான்சுட ராய்மலிந்த
சிறையணி வண்டறையுந் தில்லைமாநகர்ச் சிற்றம்பலம்
நிறையணியாம்இறையை நினைத்தேன் இனிப் போக்குவனே

நினைத்தேன் இனிப்போக்குவனோ நிமலத்திரளை நினைப்பார்
மனத்தி னுள்ளேயிருந்த மணியைமணி மாணிக்கத்தைக்
கனைத்திழி யுங்கழனிக் கனகங்கதி ரொண்பவளஞ்
சினத்தொடு வந்தெறியுந் தில்லைமாநகர்க் கூத்தனையே ௬

கூத்தனை வானவர்தங் கொழுந்தைக்கொழுந் தாயெழுந்த
மூத்தனை மூவுருவின் முதலைமுத லாகிநின்ற
ஆத்தனைத் தான்படுக்கும் அந்தணர்தில்லை அம்பலத்துள்
ஏத்தநின் றாடுகின்ற எம்பிரானடி சேர்வன்கொலோ ௭

சேர்வன் கொலோ அன்னைமீர் திகழும்மலர்ப் பாதங்களை
ஆர்வங்கொளத் தழுவி அணிநீறென் முலைக்கணியச்

---

(௫) என் கதியை - எனக்குப் புகலிடமானவனை. என்னுளே உயிர்ப்பாகி என் உடம்பினுள் சுவாசம் ஆகி. "என்னுளே உயிர்ப் பாகிப் புறம்போந்து புக்கென்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே" **அப்பர்.** (என்னிலாரும்). மறைவன் மறைந்துள்ளவன். மலிதல் - நிறைதல். நிறையணியாம் - நிறைந்து அழகுபெறச் செய்கின்ற. இனிப் போக்குவனே இனிப்போக விடுவேனோ.

(௬) வரி 3, 4. வயல்களில் சப்தத்தோடு இறங்கும் நீரானது பொன்னையும் ஒளிவீசும் பவளத்தையும் கோபத்தோடு எறிவது போல் வீசி எறிகின்ற தில்லைமா நகரிலுள்ள நடராஜப் பெருமானை நினைத்தேன் என்று கூட்டுக.

(௭) மூத்தன் - யாவருக்கும் முன்னே தோன்றியவன். ஆத்த(ன்)னைத்தான் படுக்கும் பசுத்தன்மையை (தற்போதத்தை) ஒழிக்கும் பொருட்டு யாகம் செய்யும்.

(௮) என்போல் நேசனையே சேர்வன் கொலோ (கூடும்படியா பேறு எனக்குக் கிடைக்குமோ) என்று கூட்டுக. திகழும் மலர்ப் பாதங்களை அணிநீறு என் முலைக்கு அணிய ஆர்வம் கொளத் தழுவி விளங்கும்படியான தாமரை மலர் போன்ற சிவபெருமான் பாதங்களை அவர் அணிந்துள்ள திருநீறு என் முலை ள்மீது படியும்படி அ பு பெரு த் தழுவி.

சீர்வ ம் வந்த வுந் தில்லைமா ர்ச் சிற்ற ம்பலத்
தேர்வ கை மான்மறியன் எம்பிரானென்போல் நேசனையே.

நேசமு டையவர்கள் ெ ஞ்சுளே பிட கொண்டிருந்த
ாய்சின மால்விடையூர் ண் ணுதலைக் ாமருசீர்த்
தேசமிகு பு ழோர் தில்லைமா ர்ச் சிற்றம்பலத்
தீசனை யெவ்வுயிர் கும் ம்மிறைவனென் றேத்துவமே ௯

இறைவனை ஏத்து ன்ற இளையாள்மொழி இன்தமிழான்
மறை ல நாவலர்கள் மகிழ்ந்தேத்துசிற் றம்பலத்தை
அ றசெந்நெல் ான் ரும்பின் அணியாலை ள் சூழ்மயிலை
மறைவல வாலிசோலை மகிழ்ந்தேத்துக வானெளிதே. ௧௦

திருச்சிற்றம்பலம்



(அ) வங் ம் மரக் லம். அணவும் சேரும். ஏர்வு அ க மான் மறியன் அழகிய அ ங் யில் பெண்மானைப் பிடித்தவன். என்போல் நேசனையே - எ னைப் போன்று என்னல் அன்பு செய் யப்படுபவனையே. ' என்னிலாருமெனக் கினியாரில்லை என்னிலும் இனியாளொருவ னுளன்...........என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே ' என்னும் அபப தேவாரத்தோடு ஒப்பிடுக.

(௯) காமருசீர் அழகும் சிறப்பும் வாய்ந்த அல்லது எல்லாரா லு விரும்பப்படுகின்ற சிறப்பு வாய்ந்த.

(௦) இளையாள் மொழி இன் தமிழால் காதல் ெ ாண்ட இளம் பெண்ணினுடைய வார்த்தை ள் போன்று இனிய தமிழினால். ரி 3, 4. ஒலி கின்ற செந்நெல் வயல்களாலும் பெரிய ரும்பு ளை அரைக்கும் அழகிய ஆலை ளாலும் சூழப்பட்டுள்ள திருமயிலையில் வாழும் வேதங் ளில் வல்ல திருவாலியமுதர் பாடிய பாட்டுக் ளி னல் விரும்பித் துதியுங்கள். துதித் ால், சிவலோ ம் எளிதிற் கிடைக்கும். சொல்லை சொல்லால்.

புருடோத்தம நம்பி அருளிய

# திருவி சபபா

## கோயில்

ப - பஞ் மம

*திருச்சிற்ற 'பலம்*

வாரணி நறுமலர் வண்டுகிண்டு பஞ்சம ' செண்ப
மாலைமாலை வாரணி வனமுலை மெலியும் வண்ணம் ந்து
வந்திவைநம்மை மயக்குமாலோ சீர ரி ம ரிதிகழ் மாட
மோ' கு தில்லையம்பலத் தெ ' ள் செல்வன்வாரான்
ஆரெனை அருள்புரிந் தஞ்சலென்பார் ஆவியின் பரமென்றன்
ஆதரவே.

ஆவியின் பரமென்றன் ஆதரவும் அருவினை யேனைவிட்
டம்ம அம்ம பாவிவன் மனமிது பையவேபோய்ப் பனிமதிச்

---

சிவபெருமானைக் காதலித்த பெண்ணின் மொழி ளாக இப்பதிகம் அமைந்துள்ளது. இதுவும் அந்தாதித்தொ ட.

(க) வரி 1. வண்டு ள் கிளறுகின்ற (தேன்) ஒழுகும் அழகிய வாசனையுள்ள மலர் ளும் அழகிய செண்ப மலரும் சேர்ந்த நீண்ட மாலை, மாலைக் ாலத்தில். அல்லது தேன் ஒழுகும் அழகிய மணமுள்ள மலர்களில் கிளறுகின்ற வண்டு ள் பாடும் பஞ்சமப் பண்ணும் சண்பக மாலையும் மாலை ' ாலத்தில். பஞ்சமம் அழகு, ஒருபண். வாரணி வன முலை ச்சு அணிந்த அழகிய முலை. ஆவியின் பரம் என்றன் ஆதரவே என் உயிருக்குப் பாதுகாப்பாயுள்ளது என் அன்பு ஒன்று தான்.

(உ) ஆவியின் பரமென்றன் ஆதரவும் - என் உயிர் 'குப் பாது ாப்பாயிருக்கும் என் அன்பும். அருவினையேனை விட்டு பாவிவன்... பாலதாலோ அம்ம அம்ம - கொடுவினையேனை விட்டு நீங்க, பாவியேனு டய வன்மையான மனமானது குளிர்ச்சிபொருந்திய ச டயை

சனை யான் பாலதாலோ நீவியும் நெகிழ்ச்சியும் நிறையழிவும்
நெஞ்சமுந் தஞ்சமி லாமையாலே ஆவியின் வருத்தம்
இதாரறிவார் அம்பலத் தருள்நடம் ஆடுவானே. உ

அம்பலத் தருள்நடம் ஆடவேயும் யாதுகொல் விளைவ
தென் றஞ்சிநெஞ்சம் உம்பர்கள் வன்பழி யாளர்முன்னே
ஊட்டினர் நஞ்சையென் றேயுமுய்யேன் வன்பல படை
புடைப் பூதஞ்சூழ வானவர் கணங்களை மாற்றியாங்கே என்
பெரும் பயலைமை தீருவண்ணம் எழுந்தரு ளாயெங்கள்
வீதியூடே. ங

எழுந்தருளாய் எங்கள் வீதியூடே ஏதமில் முனி
வரோ டெழுந்தஞானக் கொழுந்தது வாகிய கூத்தனேநின்
குழையணி காதினின் மாத்திரையுஞ் செழுந்தட மலர்புரை
ண்கள்மூன் றுஞ் செங்கனி வாயுமென் சிந்தைவெளவ
அழுந்துமென் னுருயிர் கென்செய்கேனோ அரும்புனல்
அலமருஞ் சடையினானே. ச

---

யுடைய சிவபெருமானிடத்துச் சேர்கின்றது; இது என்ன அதிசயம். தஞ்சம் இலாமையாலே நீவியும் நெகிழ்ச்சியும்......இது ஆர் அறிவார் ஆதரவு வேறு இல்லாமையால் உண்டான சோர்வும் மனம் உருகுவதும், மன உறுதி அழிவும், மனத்தின் தன்மையும், உயிருக்கு உண்டான வருத்தமும் யார் அறிவார்.

(ங) முன்னே ஊட்டினர் நஞ்சை யென்றேயும் யாது கொல் விளைவது என்று நெஞ்சம் அஞ்சி உய்யேன் முற்காலத்தில் நஞ்சை ட்டினார்கள் என்று கேட்ட மாத்திரத்தில் என்ன தீங்கு விளையுமோ என்று மனம் அச்சப்பட்டு இறப்பேன் (மிக்க துன்பமுறுவேன்). வானவர் கணங்களை மாற்றி (நஞ்சை ஊட்டிய) தேவர் கூட்டங்களை ஒழித்து. பயலைமை - பசலைத் தன்மை. அம்பலத் தருள் நடம் ஆடவேயும் எழுந்தருளா யெங் ள் வதியூடே ன்று கூட்டு.

(ச) மாத்திரை - ஓர் வித காதணி. செழும் தடம் மலர்புரை செழித்த பெரிய தாமரை மலரை ஒத்த. வெளவ - கொள்ளை கொள்ள. அழுந்தும் (துன்பத்தில்) ஆழும். ஆருயிர்க்கு என் செய்கேன் அரிய உயிரின் துன்பத்தைப் போக்க நான் என்ன செய்வேன்.

அரும்புனல் அலமருஞ் சடையினானை அமரர் ள் அடி பணிந் தாற்றஅந் ாள் பெரும்புரம் எரிசெய்த சிலையின் வார்த்தை பேசவும் ை யுமென் பேதைநெஞ்ச ருந்தட மலர்புரை கண்டவண்டார் ாரி கயார் முன்பென் பெண்மை தோற்றேன் திருந்திய மலரடி நசையினாலே தில்லையம்பலத் தெ ் கள் தேவே, வே. ௫

தில்லையம் பலத்தெ ் கள் தேவதேவைத் தேறிய அந்த ர் சிந்தைசெய்யும், எல்லைய தாகிய எழில்கொள் சோதி ன்னுயிர் காவல்கொண் டிருந்த ாந்தாய் பல்லையார் பசுந்தலை யோடிடறிப் பாதமென் மலரடி ோவநீபோய், அல்லினில் அருநடம் ஆடிலெங் ள் ஆருயிர் காவலிங் கரிது தானே. ௬

ஆருயிர் காவலி ் கருமையாலே அந்தணர் மதலைநின் அடிபணியக் கூர்நுனை வேற்படைக் கூற்றஞ்சாயக் கு ா கழல் பணிகொள மலைந்ததென்றால் ஆரினி அமரர் ள் குறைவிலாதார் அவரவர் படுதுயர் களையநின்ற சீருயிரே எங் ள் தில்லைவாணா சேயிழை யார்க்கினி வாழ்வரிதே. ௭

---

(௫) அலமரும் மோதுகின்ற. வார்த்தை பு ழ். கருந்தடம் மலர்புரை ண்ட வண்டுஆர் காரிகையார் கரிய விசாலமான மலரை யொத்த (மைதீட்டிய கண்களை) வண்டுகள் மலர்கள் என்று கருதிச் சூழ்ந்துள்ள அழகிய ம ளிர். பெண்மை தோற்றேன் - பெண்மைக் குணங்களை இழந்தேன். அவை நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. ந ச - விருப்பம். மலரடி நசையினாலே பெண்மை தோற்றேன் என்று கூட்டுக.

(௬) தேறிய மனம் தெளிந்த. எல்லை அளவு, தன் ம. பல்லையார் பசுந்தலையோடு இடறி - பல்லோடு கூடிய பச்சைத் தலையை ஏந்தி கால்தடுக்கி. அல்லினில் இருளில். எங்கள் ஆருயிர் காவல் அரிது தானே எங்களுடைய அரிய உயி ரக் ாப்பாற்று வது டினமாகும், உயிர் நீங்கிவிடும்.

(௭) ஆருயிர்காவல் இ ் கு அரு மயாலே தன்னுடைய அருமை யான உயிரைக் ாப்பாற்றுவது கடினமா படியினாலே. அந்தணர் மதலை - அந்தணச் சிறுவன் ' மார்க் ண்டன். கூற்றம் சாய யமன் விழ. பணிகொள அடி மப் பணி ய ஏற்றுக்கொள்ள. லைந்தது - உ தைத்தது.

சேயிழை யார்க்கினி வாழ்வரிது திருச்சிற்றம் பலத்
தெ கள் செல்வனே நீ தாயினும் மிக ல்லை றடைந்
தேன் தனிமையை நினைகிலை ச கராவுன் பாயிரும் புலி
யத ளின்னுடையும் பையமே லெடுத்தபொற் பா மு
டேயிவள் இழ தது ச மாவா எ ளை யாளுடை ஈச
னேயோ. அ

எங் ளை யாளுடை ஈசனேயோ இ ாமுலை மு ம்பெ
முய கினின்பொற் ப கயம் புரைமு ம் நோ கி ோ கிப்
பனிமதி நில வெதென் மேற்படாச் செ யல் பு ர ணி
மார்கண் முன்னே திருச்சிற்றம் பலமுட னேபுகு து அ
கு பணிட செய்து ாளும் அருள்பெறின் அ விடத்
திரு லாமே.

அருள்பெறி அ விடத் திரு லாமென் றமரர் ள்
தலைவ ம் அயனும்மாலும் இரு ரும் அறிவு ட யாரின்
மிக்கார் ஏத்துகின் ரார்இ ம் எ ள் கூத்தை மருள்படு
மழலைமென் மொழியு மயாள் ணவண வல்வினை யாட்டியே

---

(அ) பாய் இரும்புலி அதள் - பாயும் தன் மயு டய பெரிய புலியின் தோல். ண்டே இவள் இழந்தது சங்கம் ஆவா இவற் றக் கண்டு காதல் கொண்டு ஐயோ. இ ச கினுலாகிய வளையல் ளை இழந்தாள்.

(௯) மு ம் பெ முய கி மு பக்கம் அழுந்த அணைந்து பனி மதி நிலவு அது என்மேல் படா - உ து சடையின்மேலுள்ள குளிர்ச்சியான சந்திர கிர மானது என்மேல் பரவ. அகலிட

ல ம்.

(௧0) அறிவு டயாரின் மிக்கார் இரு ர் அயனும் மாலும் அறிவுடையாரின் மேம்பட்டவராகிய பிரமன் மால் ஆகிய இரு வரும். கூத்தை - கூத்தனை நடனம் செய்பனை. மருள் படும் மழலை மெ மொழியுமைய அஞ் ந் த மையும் மழலைச் சொற் ளைப் போன்ற மென் மயான சொற் ளைப் பேசும் உமா தேவியார். வல்வினை ஆட்டியேன் ான் - கொடிய வினையாகிய யிற்றினல் ஆட்டப்படுவேனாகிய நான்.

ஞன் அருள்பெற அலமரும் ெ ஞ்சமா ா ஆ சயை அள
றுத் தார்இ ாரே 0

ஆ ச அள றுத் தார்இ காரே அம்பலத் தரு ட
மாடு ானை ாச ன் மலரா ணி குழல்மடவார் வை லு
லங்தெழு மாலைப் பூசன் மாசிலா மறைபல வோது ாவ
வண்புரு டோத்தமன் க ரைத்த வாச மலர்கள் கோண்
டேத்த வல்ல ா் மலைமகள் கணவனை அணைவர்தாமே.

திருச்சிற்றம்பலம்

## உ கோயில்

ப -பஞ ம

திருச்சிற்றம்பலம்

வான ா் ள் ே ண்ட ளா் ஞ் ச உண்டார்தாம்
ஊனமிலா என்கை ஒளிவளைகள் ெ ாள்வாரோ
தேனல்வரி வண்டறையுந் தில்லைச்சிற் றம்பலவர்
ா மரோ வென்றுதே நாடகமே யாடுவரே.

( 0) அரு பெற - திருவருளைப் பெறும்பொருட்டு. அல மரும் நெஞ்சம் - மனம் துன்பப்படும். ஆ ச ய அள றுத்தார் இங்கு ஆரே - ஆசையின் அளவை இவ்வளவென்று வரையறுத்து கூறுபவர் இங்கு யார் இரு கின்றார் ள். சிவபெருமா மீது ெ ா ட ஆசை அளவு கடந்தது என்றபடி.

(க ) மாலைப்பூசல் - மாலைக் ாலத்துப் பேரொலி; அந்திவானம் முதலியவற்றை நோக்கி மாதர் இரங்குதல். வாச மலர்கள் சொற் களாகிய பூக்கள். சொல் மலர்க ளால் தொடுத்த மாலை பாட்டு. மாலைப்பூசலைக் கண்டு உ ரத்த என்று கூட்டுக.

( ) ரி , 2. தேவர் ள் வேண்ட, மேலெழுந்து வந்த விஷத் த உண்டு தேவர்களை ாத்த கருணையாளராகிய சி பெரு மான், குற்றமில்லாத என்னுடைய யில் அணிந்த ஒளியோடு கூடிய ளையல்களைக் மலச் செய்து என குத் துன்பம் விளை விப்பாரா? தேன் நல்வரி வ டு அ றயும் தேனை உண்ணு நல்ல இ சப்பாட்டைப் பாடு ண்டுகள் ஒலிக்கின்ற. வரி - இ சப்பாட்டு. ான் மரோ எ ஞுதே - நான் உறவி எ று ருதாமல். நாட மே ஆடுவரே நட மே புரிகின்றார்

ஆடிவருங் ாரவும் ஐம்மதியும் ப கொன்றை
சூடிவருமா கண்டேன் தோள் வளை ள் தோற்றாலுந்
தேடியிமை யோர்பரவுந் தில்லைச்சிற் றம்பலவர்
ஆடிவரும் போதருகே நிற்கவுமே யொட்டாரே. உ.

ஒட்டா வகைஅ வுணர் மு ப்புரங்கள் ஓரம்பாற்
பட் டாங் கழல்விழுங்க ாய்துகந்த பண்பினார்
சிட்டார் மறையோவாத் தில்லைச்சிற் றம்பலவர்
கொட் ா நடமாடக் கோல்வளைகள் ொள்வாரே. ௩

ஆரே இவைபடுவார் ஐயங் கொளவந்து
போரேடி என்று புரு ் மிடுகின்றார்
தேரார் விழவோவாத் தில்லைச்சிற் றம்பலவர்
தீராநோய் செய்வாரை ஒக்கின்றார் காணீரே. ௪

காணீரே யென்னுடைய கைவளைகள் கொண்டார்தாஞ்
சேணார் மணிமாடத் தில்லைச்சிற் றம்பலவர்
பூணார் வனமுலைமேற் பூஅம்பாற் காமவேள்
ஆணாடு கி்றவா கண்டும் அருளாரே. ௫

(உ) ஐம்மதி - அழகிய பிறை. நிற்கவுமே ஒட் ாரே - நிற்ப தற்கும் இட ங்கொடுக்கமாட் டார்.

(௩) ஒட்டா வகை - பொருந்தி இல்லாதபடி. சிட் ார் - பெரி யோர். சிட்டர், சிட்டார் என நீண்டது. கொட்டா - மத்தள முழ கத்துடன். கோல்வளைகள் கொள்வாரே - என்னுடைய அழகிய வளை யல்களைக் கழலச்செய்வாரோ ?

(௪) இவை படுவார் ஆரே - யார் தான் இத் துன்பங்களைச் சகிக் வ்லவர். இதனைப் பாட்டின் இறுதியில் சேர்த்துப் பொருள் கொள்க. போரேடி என்று புருவம் இடுகின்றார் - போரு குவா என்று அழைப்பதுபோல் புருவத்தை நெரி கின்றார்.

(௫) சேணார் மணிமாடம் - மிக உயர்ந்த அழகிய உப்பரி ள். ஆண் ஆடுகின்றவா ஆ மைத்தனம் செய்கின்ற விதத் த போ செய்கின்ற தன்மை ய.

ஏயிவரே வானவர்க்கும் ானவரே யென்பாரால்
தாயிவரே யெல்லார்க்குந் தந்தையுமாம் என்பாரால்
தேய்மதியஞ் சூடிய தில்லைச்சிற் றம்பலவர்
வாயினை கேட்டறிவார் வையகத்தார் ஆவாரே.

ஆவா இவர்தந் திருவடிகொண் டந்தகன்றன்
மூவா உடலவியக் கொன்றுகந்த முக்கண்ணர்
தேவா மறைபயிலுந் தில்லைச்சிற் றம்பலவர்
ோவா இனவளைகள் கொள்வாரோ என்னையே. ௭

ன்னை வலிவாரார் என்ற இலங்கையர்கோன்
மன்னும் முடிகள் நெரித்த மணவாளர்
செங்நெல் விளைகழனித் தில்லைச்சிற் றம்பலவர்
முன்னந்தான் கண்டறிவார் ஒவ்வார்இம் முத்தரே. ௮

முத்தர் முதுபகலே வந்தென்றன் இல்புகுந்து
பத்தர் பலியிடுக என்றெங்கும் பார்க்கின்றார்
சித்தர் கணம்பயிலுந் தில்லைச்சிற் றம்பலவர்
கைத்தலங்கள் வீசிநின் றாடுங்கால் நோக்காரே.

---

(௬) ஏ - சிவன். வானவர்க்கும் வானவரே என்பார் - தேவ தேவன் என்று பெரியோர் சொல்லு ார். ஆல் - அசை. வாயினை - வாய்மொழியை. வையகத்தார் ஆவாரே - பூமியை ஆள்பவர் ஆவார்.

(௭) அந்தகன் - யமன். மூ ா உடல் அவிய - மூப்பு அடையாத தேகம் அழிய. தேவுஆம் மறைபயிலும் - தெய்வத் தன்மை பொருந்திய வேதங் ளை ஓதிய. கோவா இனவளைகள் கோத்த (கையில் அணிந்திருந்த) கூட்டமாகிய வளையல்கள்.

(௮) வலிவார் ஆர் - துன்பம் செய்யவல்லவர் யார். என்ற என்று இறுமாந்திருந்த. வரி 4. இம்முத்தர் (பாசங்களில் நி ்று ஙங்கினவர்) இதற்குமுன் தான் ண்டறிந்தவர்போல இல்லை; என்னைக் கண்டறியாதவர்போல் ந ந்துகொள்கின்றார்.

(௯) முதுப ல் - நடுப்ப ல். வரி 2. அன்பர்களே பிச் ச யிடக் கட ீர்" என்று சொல்லி எவ்விடத்திலும் பார்க்கி ்றார். என்னை மட்டும் பார் ்வில்லை. சித்தர் ணம் பயிலும் - ஞானி க ரின் கூட்டம் வாழ்கின்ற. த்தலங் ள் வீசி - ளை வீசி. ஆடுங்கால் நோக்காரே ஆடும்போது என்மீது அருள்நோக் ம் வ ாமல் இருக்கின்றார்.

ோக் ாத தன் மயா ் ேநாக்கிலோம் ய மென்று
மாற் ாழி ஈந்து மலரோனை நிந்தித்துச்
சே ் ாத லித்தேறுந் தில்லைச்சிற் றம்பலவர்
ர்க்கேவந் தென்வளைகள் கொள்வாரோ ஒண்ணுதலீர். ௧0

ஒ ் ணுதலி ாரணமா உம்பர் தொழுதேத்தும்
் ணுதலான் தன்னைப் புருடோத்தமன் சொன்ன
பண்ணுதலைப் பத்தும் பயின்றாடிப் பாடினார்
எண்ணுதலைப் பட்டங் கினித இருப்ப ரே.

திருச்சிற்றம்பலம்

( 0) பெ ழிபபுரை. ஒளி பொருந்திய நெற்றியையு டைய பெண் ளே. திருமாலுக்குச் சக் ரத்தை அளித்து, தாமரை மலர்மே லிருக்கும் பிரமனைத் தண்டித்து, இடபத்தின்மீது விரும்பி ஏறிச் செல்லும் தில்லைச் சிற்றம்பலவர் நம்மைப் பாராத காரணத்தினால், நாமும் அவ ரப் பார்க் கவில்லை என்று அவர் ருதியபடியால், அ ், நம் ஊருக்குவந்து என்னுடைய வளையல்களை ் கொண்டு போவாரோ? மாலுக்கு ஆழி ஈந்து என்றதனால் சிவபெருமானு டைய அநு ் கிரகத் தன் மயும், மலரோனை நிந்தித்து என்றதனால் நி ் கிர த் தன்மையும், சே காதலித்து ஏறும் எ ் றதனால் தருமத்தின் ழி நடப்பவரென்றும் கூறப்பட்டுள்ளது.

(௧௧) ஒள் நுதலி ஒளி பொருந்திய நெற்றியுடைய உமாதேவி யார், (அருட்சத்தி). சி பெருமானை வணங்கித் துதிப்பதற்கு அ னரு ் வேண்டும் என்றபடி. " அவனருளாலே அ ன்தாள் வ ் கி " திரு கம. பண்நுதலை - பண்ணோடு கூடிய. எண்ணு தலைப்பட்டு அங்கு இனிதா இருப்பார் - மதிக்கப்பட்டு சிவலோ த் தில் இன்பத்தோடு ாழ் ் இருப்பா ்.

சேதிராயர் அருளிய

# திருவிசைப்பா

## கோயில்

பண் பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

சேலு லாம்வயல் தில்லையு ளீர்உமைச்
சால நாள்அயன் சார்வதி னால்இவள்
வேலை யார்விடம் உண்டுகந் தீரென்று
மால தாகுமென் வாள்நுத லே. க

வாணு தற்கொடி மாலது வாய்மிக
நாணம் அற்றனள் நான்அறி யேன்இனிச்
சேணு தற்பொலி தில்லையு ளீர்உமைக்
காணில் எய்ப்பிலள் காரிகை யே. உ

---

இப்பதிகம் சிவபெருமானிடத்துக் காதல் கொண்ட பெண்ணின் தாய் கூறின மொழிகளாக அமைந்துள்ளது. இப்பதிகம் அந்தாதித்தொடை.

(க) அயன் சார்வதினால் சமீபத்தில் சார்ந்திருந்தமையால். அயல் அயன் என மருவிற்று. வரி 4. ஒளி பொருந்திய நெற்றியையுடைய என் மகள் காதல் கொண்டாள்.

(உ) வரி 1, 2. ஒளி பொருந்திய நெற்றியையுடைய பூங்கொடியை ஒத்த என் மகள் உம்மீது காதல்கொண்டு வெட்கம் முழுமையும் இழந்தனள். நான் இன்னது செய்வதென்று அறியேன். வரி 3. அகன்ற நெற்றியோடு விளங்குகின்ற தில்லைப் பெருமானே! உமைக்காணில் எய்ப்பு இலள் உம்மைக் கண்டால் இளைப்பில்லாதவள் ஆவாள் (துன்பம் நீங்குவாள்).

ரரி கை கரு ளீர்கரு மால் ரி
ஈரு ரித்தெழு போர்வையி னீர்மிகு
சீரியல் தில்லை யாய்சிவ னேயென்று
வேரி நற்குழ லாள்இவள் விம்முமே. ங

விம்மி விம்மியே வெய்துயிர்த்(து) ஆளெனு
உம்மை யேநினைந் தேத்துமொன் றாகிலள்
செம்ம லோர்பயில் தில்லையு ளீர்எங்கள்
அம்ம லோதிஅ யர்வுறு மே. ச

அயர்வுற் றஞ்சலி கூப்பியந் தோஎனை
உயவுன் கொன்றையந் தாரரு ளாயெனுஞ்
செயலுற் றார்மதில் தில்லையு ளீர்இவண்
மயலுற் றாளென்றன் மாதிவளே. ரு

மாதொர் கூறன்வண் ர்கொன்றை மார்பனென்
றோதில் உய்வனென் பைங்கிளி யேயெனுஞ்
சேதித் தீர்சிரம் ன்முக னைத்தில்லை
வாதித் தீரென்ம டக்கொ ரடியையே. சூ

---

(ங) கருமால் கரிஈர் ரித்தெழு போர்வையினீர் - கரியபெரிய யானையின் தோலை இழுத்து உரித்து மேற்போர்வையாகக் கொண்டவரே. மிகுசீர் இயல் - மிக் சிறப்பினையுடைய. வேரி வாசனை. விம்முமே - அழுவாள். ஆதலால் காரி கக்கு அருள்செய்யக் கடவீர்.

(ச) வெய்து உயிர்த்து ஆள் எனு - பெருமூச்சு விட்டு என்னை ஆட்கொ ர்வாய் என்று சொல்லி. எத்தும் ஒன்று ஆகிலள் அயர்வுறும் - துதிப்பாள்; ஒன்று கும் பயன்படாதவளாய் தளர்கின்றாள். செம்மலோர் பெருமையு யோர். பயில் - வாழும். அம் மல் ஓதி அழகிய வளப்பமாகிய கூந்தலையுடையவள்.

(ரு) உய - உய்ய, பிழை , எனும் - என்று சொல் ாள். செயல் உற்று ஆர்மதில் - வேலைப்பாடுகள் நிறைந்துள்ள மதில்( ளை யு டைய). இவண் - இவ்விடத்து. மயலுற்றாள் - ாதலுற்று .

(சூ) எ மடக்கொ ரடி ய தில்லை வாதித்தீர் - என்னு ய பெ ணைத் தில்லையினிடத்து ருந்து படி செய்தீர். மட கொ ரடி - பெ .

கொடியைக் கோமளச் சாதியைக் கொம்பிளம்
பிடியை யென்செய்திட் டீர்பணத் தார்புரம்
இடியச் செஞ்சிலை நல்வளைத் தீரொன்று
முடியும் நீர்செய்த மூச்சறவே. எ

அறவ னேஅன்று பன்றிப் பின்னேகிய
மறவ னேயெனை வாதைசெய் யேலெனும்
சிறைவண் டார்பொழில் தில்லையு ளீரெனும்
பிறைகு லாநுதற் பெய்வளையே. அ

அன்ற ருக்கனைப் பல்லிறுத் தானையைக்
கொன்று காலனைக் கோளிழைத் தீரெனுந்
தென்ற லார்பொழில் தில்லையு ளீரிவள்
ஒன்று மாகில ளும்பொருட்டே. க

(எ) கொடியை - பூங்கொடி போன்றவளை. கோமளச் சாதியை- இளமை அழகு வாய்ந்தவளை. கொம்பு இளம் பிடியை - மத்தகத் தோடு கூடிய இளம் பெண் யானைபோன்றவளை. வரி 4. நீர் செய்த மூச்சு அறவே முடியும் நீர் காட்டிய (இரங்காத) ஆண்மைத்தனம் கெடும்படியாக இறந்துபடுவாள்.

(அ) அறவனே - தரும சொரூபியே. மறவன் - வேடன். "மறவனை அன்று பன்றிப்பின் சென்ற மாயனை நால்வர்க்கு ஆலின் கீழ் உரைத்த அறவனை" ந்தரர். அருச்சுனன் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்யும்போது, அவனைக் கொல்லும் பொருட்டுப் பன்றியுருவோடு வந்த மூகாசுரனென்னும் அரக்கனைக் கொல்ல சிவபெருமான் வேடவுருவங் கொண்டு, அப்பன்றியின் பின் சென்றார் என்னும் பாரதக்கதை குறிக்கப்பட்டுள்ளது. பிறை குலாம் நுதல் - சந்திரனைப் போன்று பிரகாசிக்கும் நெற்றி. பெய்வளை - மிகுதியான வளையல்களை அணிந்தவள். ஏ - அசை.

(க) அன்று - தக்கன் வேள்வி செய்த காலத்தில். அருக்கனைப் பல் இறுத்து சூரியனுடைய பற்களை உடைத்து. கோள் இழைத்தீர் - கொலை செய்தீர். வரி 4. உம்மிடத்துக்கொண்ட காதல் காரணமாக இவள் ஒன்றுக்கும் உதவாமல் இருக்கின்றாள்.

ஏயு மாறெழிற் சேதியர் கோனதிலலை
நாய ஞரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் த்திடை
ஆய இன்ப மெய்தி யிருப்பரே

*திருச்சிற்றம்பலம்*

*ஆ திருப்பதி ம் உஅ*

திருவிசைப்பா முற்றும்.

(க0) ஏயுமாறு - பொருந்தும் விதம . ழிற் சேதியர்கோன் அழகிய சேதி நாட்டிற்கு அரசஞன சேதிராயர். நயஞரை நயந்து - தலைவரை விருப்பி. துற 'கம் - சிவலோ ம். ஆய இன்பம் மேலான இன்பம், பேரின்பம்.

சேந்தனார் அருளிய

# திருப்பல்லாண்டு

## கோயில்

பண் பஞ்சமம்

*திருச்சிற்றம்பலம்*

*மன்னுக* தில்லை வளர்கநம் பத்தர்கள் வஞ்சகர் போயக லப் பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து புவனி யெல்லாம் விளங்க அன்னநடை மடவாள் உமைகோன் அடியோமுக் ருள்புரிந்து பின்னைப்பிறவி யறுக்க நெறி தந்த பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே. க

*மிண்டு* மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள் வி ரந்து வம்மின் கொண்டுங் கொடுத்துங் குடிகுடி ஈசற் காட் செய்மின் குழாம்புகுந்து அண்டங் கடந்த பொருள் அளவில்லதோர் ஆனந்த வெள்ளப் பொருள் பண்டுமி ' றும்என்றும் உள்ளபொரு ளென்றே பல்லாண்டு கூறு துமே. உ

---

(க) வரி 1. தில்லை மன்னுக (நிலைபெற்றிருப்பதாக) வஞ்சகர் பே ய் அகல (நீங்கிப்போ ) 'ம் இனத்த ர்களாகிய சிவ டியார்கள் வளர்க (செழித்து ஓங்குக). ளைகளைப் பிடுங்கி எறியப் பயிர்கள் செழிப்பது போன்று வஞ்ச ர்கள் ஒழிந்தால் சிவனடியார்கள் ஓ 'குவார்கள். பின்னைப்பிறவி - இனிமேல் வரும் பிறப்பு. நெறி முத்திநெறி, திருவருள் நெறி. பல்லாண்டு கூறுதுமே பல்லாண்டு ள் வாழ்வீரா என்று ாழ்த்து கூறுவோம். என்றும் அழிவில் லாத சிவபெருமானுக்குப் பல்லாண்டு கூறுவது உபசாரம்.

(உ) மிண்டு மனத்த ர் - மதங்கொண்ட மனத்தையு டைய 'ர். வரி 2. இறைவன் சம்பந்தமான பிறருடைய அநுப த்தைக் (Spiritual experiences) கேட்டும் தம்முடைய அநுபவத்தைப் பிறருக்குச் சொல்லியும் பரம்ப ரயா ஈசனுக்கு அடிமைப்பணி செய்யுங்கள். அல்லது கொண்டும் கொடுத்தும் - சிவபெருமானிடத்து அன்பு செலுத்தி அவனருளைப் பெற்றும் என்னலுமாம்.

நிட்டையி லாவுடல் நீத்தென்னை யாண்ட நிகரிலா வண்ணங்களுஞ் சிட்டன் சிவனடி யாரைச் சீராட்டுந் திறங்களுமே சிந்தித்து அட்ட மூர்த்திக்கென் அக(ம்)நெக வூறும் அமிர்தினுக்(கு) ஆலநிழற் பட்டனுக்(கு) என்னைத்தன் பாற் படுத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. ௫

சொல்லாண்ட சுருதிப் பொருள் சோதித்த தூய் மனத் தொண்டருள்ளீர் சில்லாண்டிற் சிதையுஞ் சிலதேவர் சிறுநெறி சேராமே வில்லாண்ட கனகத் திரள்மேரு விடங்கன் விடைப்பாகன் பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. ௬

புரந்தரன் மாலயன் பூசலிட் டோலமிட் டின்னம் புலரிதாய் இரந்திரந் தழைப்பஎன் னுயிராண்ட கோவினுக் கென்செய வல்லமென்றுங் கரந்து கரவாத கற்பகனாகி

(௫) வரி 1. நிஷ்டை கூடாத உடலின் தன்மை யநீங்கும்படிச் செய்து என்னை அடிமையாகக் கொண்ட ஒப்பற்ற தன்மையும். சிட்டன் - நல்லோன். சீராட்டும் - பெருமைப்படுத்தும். அகம்நெக ஊறும் அமிர்தினுக்கு - மனம் கசியும்போது உண்டாகின்ற பேரானந்த உணர்ச்சியாயிருப்பவனுக்கு. பட்டன் - ஞானாசாரியன். தன் பாற்படுத்தான் - தன் வயமாக்கிக் கொண்டவன்.

(௬) சொல் ஆண்ட - புகழ்ந்து பேசப்பட்ட. சோதித்த ஆராய்ச்சி செய்த. வரி 3. பொன் குவியல்போன்ற மேருமலையை வில்லாகக் கொண்ட அழகன். வரி 4. பல் ஆண்டு என்னும் சொல்லின் அளவைக் கடந்து நின்றவனுக்கு - என்றும் அழிவில்லாதவனுக்கு.

(௭) பூசல் இட்டு - சண்டைசெய்து. இன்னம் புலரிதாய் - இன்னமும் தஞ்சமென்று அடைய அரியவனாகி. வரி 2. அவர்கள் உன்னைக் கெஞ்சிக் கெஞ்சிக் கூப்பிடவும் வெளிப்படாமல் என் உயிரைத் தன் வயப்படுத்தின அரசனை சிவபெருமானுக்கு என்ன கைம்மாறு செய்யவல்லோம் என்றும். கரந்தும் கரவாத கற்பகனாகி - தான் வெளிப்படாமலிருந்தும், (நான் வேண்டியவற்றை) ஒளியாது கொடுக்கும் கற்பகவிருக்ஷம் போல்பவனாகி.

கரையில் கருணைக் டல் பரந்தும் நிரந்தும் ரம்பிலாப் பா
கற்கே பல்லாண்டு கூறுதுமே. ரு

சேவிக் வந்தயன் இந்திரன் செங்கண்மா லெங்கு
திசை திசையன கூவிக் கவர்ந்து நெருங்கிக் குழாங்குழா
மாய்நின்று கூத்தாடும் ஆவிக் கமுதைஎன் ஆர்வத் தனத்
தினை அப்பனை யொப்பமரா பாவிக்கும் பாவகத் தப்புறத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. சு

சீருந் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவாருலகில்
ஊரும் உலகுங் கழற உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும் பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே.

---

(ரு) பரந்தும் நிரந்தும் - எல்லாப் பொருள்களிடத்தும் பரவியும் நிறைந்தும். வரம்பிலா எல்லையில்லாத. பாங்கற்கு - அழகு வாய்ந்தவனுக்கு அல்லது தோழனுக்கு.

(சு) திசைதிசையன - திக்குகள் தோறும். கவர்ந்து-இடத்தை ஆக்கிரமித்து. ஆர்வத் தனத்தினை - பேரன்பாகிய செல்வத்தை யுடையவனை. ஒப்பு அமரா பாவிக்கும் பாவகத்து அப்புறத்தானுக்கு தனக்குச் சமானமாக வேறொருவரும் இல்லாதவனும், நினைக்கின்ற நினைப்பிற்கு அப்பாற்பட்டவனும் ஆகிய சிவபெருமானுக்கு.

(எ) வரி 1, 2. சிறப்பும், திருவருட் செல்வமும் விளங்கச் சிவபுரத் தலைவனது சிவந்த திருவடியின்கீழ் இருந்து பிறர் யாரும் பெறுதற்கரிய அறிவினைப் பெற்றேன். சிவபெருமான் திருவருளால் தான் அடைந்த பேற்றினை வியந்து கூறுகின்றார். "இறுமாந்திருப்பன் கொலோ ஈசன் பல்கணத்து எண்ணப்பட்டு சிறுமனேந்தி தனசே டிக்கீழ் சென்றங்கு இறுமாந்திருப்பன் கொலோ அப்பா. வரி 3, 4. ஊரிலுள்ளாரும் உலகத்தவர்களும் புகழ்ந்து பேச நாம் உமையாள் கணவனுக்கு அடிமைப்பட்ட தன்மையை உலகிலும் ஆகாயத்திலும் உள்ளவர்கள் அறியும் விதமாக அன்பினால் நாங்குளறி நாம் பல்லாண்டு கூறுவோமாக.

சேலு யனுந் திளேக்குங் கண்ணூர்இளங் கொங்கை யிற் செங்குங்குமம் போலும் பொடியணி மார்பிலங் குமென்று புண்ணியர் போற்றிசைப்ப மாலும் அயனும் அறியா நெறி தந்து வந்தென மனத்தகத்தே பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே பல்லாண்டு கூறுதுமே. அ

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான் மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லைதன்னுள் ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம்பலமே யிடமாகப் பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே பல்லாண்டு கூறுதுமே. ௯

தாதையைத் தாளற வீசிய சண்டிக்கிவ் அண்டத்தொடு முடனே பூதலத் தோரும் வணங்கப்பொற் கோயிலும் போனகமும் அருளிச் சோதி மணிமுடித் தாமமும் நாமமும் தொண்டர்க்கு நாயகமும் பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. ௰

---

(அ) திளேக்கும் கண்ணூர் - (அழகில்) ஒருங்கு சேர்ந்தாற் போன்ற கண்களையுடைய மாதர்கள். போற்றிசைப்ப துதிக்க. மாதர் கொங்கையில் அணிந்த செங்குங்குமம் ஆடவர்க்கு அம்மாதர் மீது ஆசையைப் பெருக்குவது போன்று, சிவபெருமான் திரு மார்பினிடத்து அணிந்த திருநீறு, அடியவர்களுக்கு அவாம்து அன்பைப் பெருக்கும் தன்மையுடையது. மாலும் அயனும் அறியா நெறி - திருவருள் நெறி.

(௯) பாலகன் - சிறுவனுகிய உபமன்யு முனிவர். ஆலிக்கும் - களித்திருக்கும். பாலித்து - அருள்புரிந்து. நட்டம் பயில - நடனம் புரிய.

(௰) வீசிய - வெட்டிய. அண்டத்தொடும் - தேவர்களோடு. போனகம் - உணவு. தாமம் - மாலே. நாயகம் - தலைமை. வரி 4. ஆகிய இவைகளைச் சண்டேசுர நாயனார் செய்த தந் தயின் காலை வெட்டின பாபச்செயலுக்கு வெகுமதியாக் கொடுத்தவனுக்கே,

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மி மிகுதிரு வாரூரின் மழவிடை யாற்கு வழிவழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த பழஅடியாரொடுங் கூடி எம்மா னுக்கே பல்லாண்டு கூறுதுமே.

ஆரார் வந்தார் அமரர் குழாத்தில் அணியுடை ஆதிரை நாள் நாராயணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திர னுந் தேரார் வீதியில் தேவர் குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே. க௨

எந்தை எந்தாய் சுற்ற(ம்)முற்றும் எமக்கமுதாம் எம்பி ரான் என்றென்று சிந்தை செய்யுஞ் சிவன்சீரடியார் அடிநாய்

(க) குழாம் - கூட்டம க. விழஒலி திருவிழாவின் ஒலி. விம்மி மிகு மேல்மேலும் பெருகி அதிகரிக்கின்ற வரி 3. இளமை வாய்ந்த இடபத்தை வாகனமாக உடைய சி பெருமானுக்குப் பரம்பரையா அடிமை பூண்ட ஆடவரும் மகளி ரும் மணம் செய்து கொண்ட குடும்பத்தில் பிறந்த.

(உ) அங்கி - அக்கினிதேவன். வரி 4. பூமி முழுதும் நிறைந்த (சிவபெருமானுடைய) பழமையான புகழைப் பாடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இருக்கும் நாம் பல்லாண்டு கூறுவோம்.

(௩) வரி 1. எனக்குத் தந்தையும், தாயும், உறவினர் எல் லாம் ஆகி எமக்கு இன்பம் தருவோன் எம் தலைவனாகிய சி பிரான் என்று எப்போதும். சிவன் சீரடியார் அடிநாய் அந்தமில் ஆனந்தச் சேந்தன் செப்புஉரை எனைப்புகுந்து ஆண்டுகொண்டு பந்தம் பிரிய ஆருயிர்மேற் பரிந்தவனே என்று பல்லாண்டு கூறு துமே உ௩. சிவபெருமானுடைய சிறப்புற்ற அடியவர் களுக்கு அடியனான நாய் போன்றவனான முடிவில்லாத பேரா

செப்புரை* அந்தமில் ஆனந்தச் சேந்தன் னைப்புகுந் தா ' டு
கொண் டாருயிர்மேல் பந்தம் பிரியப் பரிந்தவனே யென்று
பல்லாண்டு கூறுதுமே. ௧௩

திருச்சிற்றம்பலம்

திருப்பல்லாண்டு முற்றும்



---

னந்தத்தை அனுபவிக்கும் சேந்தனாகிய நான் சொல்லிய மொழி யாதெனில் ன்னுடைய உடலில் புகுந்து அடி மயா க் ொ ாண்டு என்னுடைய மலக் ட்டு ள் ஒழிய என் அரிய உயிர்மீது இர ' ங் கொண்டு அருள் புரிந்த ே பல்லாண்டு வாழ் என்று பல்லா ' டு கூறு தே யாகும்.

செப்பு ற செ 'மி ற என்றும் பாட '.

# பாடடு முதறகுறிபபகராதி

# திருக்கோவையார்

## திருப்பல்லாண்டு





ச சித்தாந்த ஹாச ராஜ ெ ரியீடு வா

# திருவாசகம

அ. சோமசுந்தரஞ் செட்டியார் எழுதிய அரும்பொருள் விளக்க உரையுடன் வெளிவந்துள்ளது

' சொல்லிய பாட்டின் பொருளு ர்ந்து சொல்லுவார் செல்வர் சிவபுரத்தின் ன்றமையால் இத்திருவாசக, தைப் பொருளுணர்ந்து ஓதிப் பயனடைவதற்குப் பெரிதும் இப்பதிப்பு உதவி புரிகின்றது. ஒவ்வொரு ெ சவரிடத்தும் அ சியம் இரு 'கவேண்டிய புத்தகம்.

28 பககம                காலிகே ா பைணடு

தனிப்பிரதி விலை அணா 10. } 10 பிரதிகள் ரூபா. 5.
ரிஜிஸ்டர் தபாற் கூலி அணா 6. } ரயில் பார்சல் கூலி வேறு

திருக்கோவையார் மூலமும்
திருவிசைப்பா திருப்பல்லாண்டு
அருமபொருள் விளக்க உரையுடன்

இவைகளுக்கு ல்ல ரை இதுவரை பதிப்பிக்கப்பட வில்லை. இவ்வுரைநூல் பல புலவர்களின் உதவியை' கொண்டு அ சோமசுந்தரஞ் செட்டியார் இயற்றியுள்ளார் பல விட 'களில் உ ர காண்பது கடினமாயிருப்பினும் மிக் பிரயாசை எடுத்து 'ெ ா ' டு உரை செய்யப்பட்டுள்ளது

232 பக ம                காலிகே ா பணடு

தனிப்பிரதி விலை அணா 9. } 10 பிரதிகள் ரூ. 4 10 0
ரிஜிஸ்டர் தபாற் கூலி அணா 5. }

ஷை திருவாசகம் திருக்கோவையார் திருவிசைப்பா திருப்பல்லா 'டு ஆகிய நான்கும் சேர்ந்த புத்தகம்.

520 பக்கம                க லிகோ பைணடு

தனிப்பிரதி 1 க்கு ரூபா 1 2 0 } 8 பிரதிகள் ரூபா 7 4 0.
ரிஜிஸ்ட ர் தபாற் கூலி அணா . }

# சுநதரா தேவாரம

## சைவசித்தாநத மஹாசமாஜ இரண்டாம் பதிப்பு

இதில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரப் பதி ங்கள், சரித்திர முறையில் சுவாமிகள் சரித்திரத்துடனும் தேவாரங்களைப்பற்றிய குறிப்புள்ள பெரிய புராணச் செய்யுள்களுடனும் அச்சிடப்பட்டுள்ளன. தேவாரங்களுக்கு ரு ்மணி குக்கர் கம்பெனி சொந்தக்காரர் அ. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் எழுதிய அரும்பொருள் விளக்கக் குறிப்புகளும் சேர்க்கப்பட்டுள்ளன. இப் புத், த்தைப் படிப்போர் தேவாரத்தின் பொருளை உணர்ந்து இம்மை மறுமைப் பயனை அடைவர். தேவார பாராயணம் செய்பவர் ஒவ்வொரு ர ரிடத்தும் அவசியம் இரு ்கவேண்டியது

**368 பக்கம ாலிகோ பணடு**

தனிப்பிரதி விலை அணு 12.
ரிஜிஸ்டர் தபாற் கூலி அணு 6.
} 6 பிரதி ள் விலை ரூபா. 4.

**கவனிப்பு:** 2 பிரதி ளுக்கு மேல் வேண்டியவர்கள் ரயில்வே பார்சல் மூலம் தருவித்தால் செலவு குறையும். S. I. R. M. S. M. ரயில்வே ஸ்டே ஷன்களுக்கு தூரத்திற்குத்தக்கபடி 6 அணு முதல் ஆகும். தபால் மூலம் தருவிப்பவர்கள் தபால் செலவும் சேர்த்து மணிஆர்டர் செய்யவேண்டும். ரயில்வே பார்சல் மூலம் தருவிப்பவர்கள் புத்தகங்களின் கிரயத்தை மட்டும் அனுப்பவேண்டும். ரயில் செலவைக் கட்டி பார்சலை எடுத்துக்கொள்ளவேண்டும்.

கிடைக்குமிட ்க :

1. சைவசித்தாந்த ம ா சமாஜம்
திருவருளகம் 2? A கல்லுக்காரத் தெரு
மயிலாப்பூர் சென்னை

2. முருகவேள் புத்தகசாலை
12 கணபதி முதலி தெரு
இராயப்பேட்டை சென்னை.

3. இரத்தின நாயகர் & சன்ஸ்
நயினியப்ப ாய் ் ன் வீதி பார் ் டவு ் சென்னை.

---

சாது அச்சு ் டம் இராயப்பேட்டை, சென்னை.